# பொருளடக்கம்

3088

ஸ்ரீ:

# பாகவத பால பாடம்

## ஸ்ரீ கிருஷ்ணன் சரிதை

### கடவுள் துதி

*தேவர்களும் பூமகளும் சிந்தைமகிழ்ந் தேதுதிக்கத்*
*தேவகிதன் சேயாய்த் திருமதுரை—மேவகில*
*நாயகனை மாதவனை நாரணனை நாடிநிதம்*
*வாயகங்கொண் டேவாழ்த்து வாம்.*

### 1. கிருஷ்ணவதார வரலாறு

உலகத்திற் சிறந்து விளங்கும் நகரமாகிய வடமதுரையில் முன்னொரு காலத்தில், யதுகுல சிரேஷ்டனாய் விருஷ்ணி வமிசத்திற் பிறந்த உக்கிரசேனன் அரசுபுரிந்து வந்தான். இந்த உக்கிரசேனனுக்குத் தேவகன் என்னும் தம்பி யொருவனிருந்தான். இவர்களுள் உக்கிரசேனனுக்குக் கம்சனென்னும் புத்திரனும், தேவகனுக்குத் தேவகி யென்னும் புத்திரியும் பிறந்திருந்தார்கள்.

இவர்கள் காலத்தில், யதுவமிசத்தின் மற்றொரு பிரிவாகிய போஜகுலத்தின் தலைவனான சூரசேனனுக்குப் புத்திரனாய்ப் பிறந்த வசுதேவர் என்பவர் உக்கிரசேனனிடம் மந்திரியாயிருந்தார். இவர் யமுனாநதி தீரத்திலுள்ள கோகுலத்தை

அச்சமயம் அரசாண்டுவந்த ஆயர் சிரேஷ்டனாகிய நந்தகோப னுடன் சிநேகங் கொண்டிருந்தார். இவ்விருவரும் எந்தக் காரியத்தையும் ஒருவரோடொருவர் கலந்துபேசி, நடத்தி வருவதுண்டு.

உக்கிரசேனனுக்குப் பிறந்த கம்சன் மிகவும் பராக்கிரம சாலி; அசுராம்சமுடையவன். இவன் தலையெடுத்த போது இவனுக்குப் பிரலம்பன், பகாசுரன், சாணூரன், திருணாவர்த் தன், அகாசுரன் முதலிய தானவர் நண்பரானார்கள். இவன் இவர்களுடைய உதவியாலும், தனக்கு இயற்கையாயமைந்த துர்ப்புத்தியாலும், "தேளுக் கதிகாரம் வந்தால் நாழிக்கொரு தரங் கொட்டும்" என்பதற்கிசைய உலகத்தை துன்புறுத்தி வந்தான். நாளடைவில் இக்கொடுமை அதிகரித்து விட்டது. அது பூமிக்கே பெரும்பாரமா யிருந்தது. அந்தப் பாரத்தைப் பூமிதேவி பொறுக்க முடியாதவளாய்ப் பசுவினுருவங்கொண்டு பிரமலோகத்திற்குப் போய், நான்முகக் கடவுளிடம் தனது குறையை வெளியிட்டாள்; தன் குறையைத் தீர்த்துத் தன்னை இரக்ஷிக்கும்படி வேண்டினாள்.

அவ்வாறு பூமிதேவி முறையிட்டதைக் கேட்ட சதுர் முகன், அவளைச் சமாதானப்படுத்தி யனுப்பிவிட்டுத் தேவர் கள் புடைசூழத் திருப்பாற்கடலை அடைந்து, அங்கு ஆயிரம் பணாமுடிகளைக் கொண்ட ஆதிசேடன் மீது அறிதுயில் கொண்டிருந்த ஆதியம் பகவனாகிய விஷ்ணுமூர்த்தியைக் கண் டான். கண்டதும் வணங்கிப் புவிக்கு நேர்ந்திருந்த கெடுதியை அவர் திருச் சமுகத்தில் விண்ணப்பித்து, பூமி பாரத் தைப் போக்கிச் சகல வுயிர்களையும் பாதுகாக்குமாறு அவ ரைப் பிரார்த்தித்தான். அடைந்தாரை ஆதரிக்கும் பக்த வத்ஸலனாகிய எம்பெருமான், "பூமிக்கு நேர்ந்த துயரத்தை

நாம் விரைவில் அகற்றுவோம்" என்றுகூறி அந்த பிரமதேவனுக்கு அபயாஸ்தங் கொடுத்து அவனை அனுப்பிவிட்டு, யோக மாயையை அழைத்து அவளை நோக்கி, "ஓ மாயையே! பிற்காலத்தில் வசுதேவனுக்கு இரண்டு மனைவியர் ஏற்படுவார்கள்; அவர்களுள் ஒருத்தியின் பெயர் தேவகி; மற்றொருத்தி உரோகிணி. பாதாளத்தில் இரணியகசிபுவின் குமாரர் அறுவர் இருக்கின்றார்கள். அவர்களை நீ முறையே தேவகியின் கருப்பத்தில் சேர்ப்பிக்க வேண்டும்; அந்த அறுவரும் கம்சனால் சங்கரிக்கப்படுவார்கள்; பின்னர் என்னுடைய அமிசமாயிருக்கின்ற ஆதிசேடன் தேவகியின் ஏழாங் கருப்பத்தில் ஜனிப்பான். அப்போது வசுதேவனுடைய மற்றொரு மனைவி உரோகிணி ஏழுமாதக் கருப்பத்துடன் இருப்பாள். வசுதேவன் கம்சனுக்குப் பயந்து அவளைத் தன் நண்பனாகிய நந்த கோபன் வீட்டிற்கனுப்பி மறைத்து வைப்பார். நீ தேவகியின் ஏழாங்கருவை அந்த உரோகிணியின் வயிற்றிற் சேர்த்து அவள் வயிற்றிலுள்ள வாயு ரூபமான ஏழுமாதத்துக் கருப்பத்தைக் கலைத்துவிட வேண்டும். அப்படி உரோகிணி வயிற்றில் உன்னால் சேர்க்கப்படும் கருவிலிருந்து சேஷன் பலராமனாகப் பிறப்பான்; முதலில் கருப்பத்தினின்றும் இழுக்கப் பெற்ற காரணத்தால் சங்கர்ஷணன் என்னும் பெயரையுமடைவான். அதன்மேல் நான் தேவகியின் வயிற்றில் பிரவேசிப்பேன். அந்தக் காலத்திலேயே நீ நந்தகோபனுடைய மனையாளான யசோதை வயிற்றில் ஒரு பெண்ணாக உதிக்கவேண்டும். அப்போது எனது சங்கற்பப்படி வசுதேவன் என்னை யசோதையிடம் விட்டு அவள் பெற்ற பெண் குழந்தையாகிய உன்னைத் தேவகியிடம் சேர்ப்பான்; பிறகு நான் கம்ஸன் முதலியவர்களை ஒழித்துப் பூமியின் பாரத்தைத் தீர்ப்பேன்"

என்று கூறினர். மாயை அக்கட்டளையைச் சிரமேற் கொண்டிருந்தாள். இக்காரணத்தாலேயே கிருஷ்ணாவதாரம் ஏற்பட்டது.

## 2. தேவகி திருமணம்

உக்கிரசேனன் அரசுபுரிந்து வருங்காலத்தில், வசுதேவர் நற்குணங்களிற் சிறந்தவரா யிருந்தபடியால் தன் தம்பி தேவகனின் புத்திரியாகிய தேவகியை அந்த வசுதேவருக்கு மணஞ் செய்து கொடுத்தான்.

அவ்வாறு தேவகி என்பவளை வசுதேவர் விவாகஞ் செய்து கொண்டபோது உக்கிரசேனன் புத்திரனை கம்சன் மகிழ்ந்து கலியாண இரதத்தில் மணமக்களை யேற்றி, தான் அந்த இரதத்தை ஊர்வலமாக நடத்தினன். அப்போது ஆகாயத்தில், "அடா கம்சனுகிய மூடா! நீ எவளை, அவள் புருஷனோடு தேரிலேற்றிக்கொண்டு வெகு பிரியமாய்ச் செல்லுகிருயோ, அவளுடைய எட்டாவது பிள்ளை உன்னுயிரைப் போக்கும்" என்று கம்பீரமான ஓர் அசரீரி வாக்குண்டாயிற்று. அதைக் கேட்டதும் கம்சன் இரதத்தை விட்டிறங்கித் தன் தங்கையைக் கொல்லத் துணிந்தான். அப்போது வசுதேவர் அவனைத் தடுத்து "ஏ கம்சா! மகாவீரனுகிய நீ பெண் கொலை செய்வது தகாது; இவளோ உன் தங்கை: மணக்கோலத்துட னிருக்கின்றுள்; இப்பேர்ப்பட்டவளை நீ கொன்று பிணக்கோலஞ்செய்யத் துணிவது நீதியாகாது; இப் பாதகச் செயலை விட்டுவிடு" என்று அவனுக்கு நற்புத்தி கூறினர்.

அதைக்கேட்டுக் கம்சன், "வசுதேவரே! நீர் சொல்வது நியாயமே; ஆயினும் இவள் வயிற்றிற் பிறக்கும் குழந்தை

3088



யால் எனக்கு மரணம் நேருமென்பதை நான் அசரீரியால் உணர்ந்து கொண்டேன்; அவ்வாறு தெரிந்து கொண்டபின் இவளைக் கொல்லாமல் விடுதற்கு என்மனம் இசையாது; ஆதலால் இவள் இப்போது மணக்கோலத்துடனிருந்தாலும், என் தங்கையா யிருந்தாலும் நான் இவளைக் கொன்றே தீருவேன்; என் உயிரைக் காட்டிலும் இவள் சிறந்தவளா?'' என்றான்.

வசுதேவர், அவனுடைய பிடிவாதத்தைக் கண்டு மனங் கலங்கி மேலும் அவனை நோக்கி, "கம்சா! இவள் வயிற்றி லுண்டாகும் எட்டாவது சிசுவால் உனக்குத் தீங்கு நேருமென்று அசரீரிகூறிற்று; அது நேருங்காலம் எப்பொழுதோ? அதற்காக இப்பொழுதே நீ இவளை வதைத்து ஏன் பாவத்தைத் தேடிக்கொள்கிறாய்? அந்தப் பிள்ளை பிறக்குங் காலத்தில் வேண்டுமானால் நீ அதற்குத் தக்க உபாயத்தைத் தேடிக் கொள்ளலாம்; இப்பொழுது இக்கொடுங் கொலையைச் செய்ய வேண்டாம்'' என்று சொன்னார்.

இந்த நியாயங்களெல்லாம் அவன் செவிக் கேறவில்லை. அவன், "வசுதேவரே! நீர் சொல்லுகிறபடி செய்வதானால் நான் எப்பொழுதும் சந்தேகத்துடன் காலங் கழிக்கவேண்டும்; என் பகையாளி பிறத்தற் கேதுவாயிருக்கும் இவளையே தொலைத்து விட்டால், எவ்வித கலக்கமுமின்றி யிருக்கலாம்; ஆதலின், நீர் என்னைத் தடுக்கவேண்டாம்'' என்று பிடிவாதமாகக் கூறினான்.

அதற்கு மேலும் வசுதேவர் என் செய்வார்? 'இனி இவனுக்கு என்ன சமாதானங் கூறலாம்?' என்று யோசித்தார். முடிவில் ஒரு விதத் தீர்மானஞ் செய்துகொண்டு அவனை நோக்கி, "கம்சா! நீ எவ்வித சந்தேகமுங் கொள்ளவேண்டாம்; அந்த எட்டாவது குழந்தை பிறந்தவுடனே நான் அப்

பிள்ளையை உன்னிடம் கொடுத்துவிடுகிறேன்; மற்ற குழந்தைகளாலும் உனக்குச் சந்தேகமுண்டானால் அச்சிசுக்களையும் உன் வசத்திலேயே சேர்த்து விடுகிறேன்; என் மனைவியைக் கொல்லாதே" என்று கெஞ்சினர்.

அதன்மேல் அவனுக்குச் சிறிது கோபந் தணிந்தது. அவ்வாறு அவன் சாந்தமடையவே தேவகியைக் கொல்லாமல் விட்டான். அதன் பொருட்டு வசுதேவர் அவனைப் பலவாறு புகழ்ந்தார். பின்னர் கம்சன், வசுதேவரையும் தேவகியையும் அவர்களுடைய மாளிகையிற் சேர்த்துவிட்டுத் தன்

## 3. வசுதேவர் வாக்குறுதியை நிறைவேற்றல்

பின்னர் வசுதேவர், தமக்கு முன் ஏற்பட்டிருந்த உரோகிணி என்னும் மனைவியோடும், தேவகியுடனும் மனமகிழ்ந்து வாழ்ந்து வந்தார். அக்காலத்தில் தேவகி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். வசுதேவர், கம்சனுக்கு முன் வாக்குத்தத்தஞ் செய்தபடி அக்குழந்தையை எடுத்துக்கொண்டு போய் அவனிடம் கொடுத்தார். அவர் சத்தியந் தவறாது செய்த அச்செய்கையைக் கம்சன் பார்த்தவுடன் அவனுக்கு அவர்மீது மிகுந்த பக்ஷம் உண்டாயிற்று; குழந்தையின் மீதும் இரக்கம் ஏற்பட்டது. உடனே அவன் வசுதேவரை நோக்கி, "தேவரே! நீர் சத்தியந் தவறாத உத்தம குணசீலர்; சொன்ன சொல் தவறாமல் சிசுவைக் கொண்டுவந்தீர்; இத்தகைய உமது பெருங் குணத்தைக் கண்டு நான் அகமகிழ்ந்தேன். இக்குழந்தையை வதைக்க எனக்கிஷ்டமில்லை; எட்டாவது சிசுவால் தானே எனக்குத் தீங்குநேரும்; நான் அக் குழந்தையைக் கொன்று என் பகையைத் தீர்த்துக் கொள்வேன்; நீர் இக்

குழந்தையைக் கொண்டுபோய் வளர்த்துக் கொள்ளும்" என்று கூறினான். அவன் மனம் அவ்வாறு நன்மார்க்கத்தில் திரும்பியதற்காக வசுதேவர் மகிழ்ந்து அவனைப் புகழ்ந்து குழந்தையைக் கொண்டு போய்த் தேவகியிடம் கொடுத்து நடந்த செய்தியைக் கூறினார். தேவகி மனக் கலக்கம் நீங்கி அக்குழந்தையை அன்புடன் வளர்த்து வந்தாள்.

அதன்மேல் அவளிடம் ஐந்து குழந்தைகள் பிறந்தார்கள். இந்த ஆறு குழந்தைகளும் அவளாலும், வசுதேவராலும் வளர்க்கப்பட்டு வந்தார்கள். பின்னர் தேவகி ஏழாவது கருப்பத்தை அடைந்தாள். அப்போது உரோகிணியும் கருக்கொண்டிருந்தாள்.

## 4. நாரதரால் கம்சன் மனம் மாறுபடல்

அக்காலத்தில் ஒருநாள் நாரதர், கம்சனிடம் வந்தார். அவரைக் கண்டதும், கம்சன் எதிர்கொண்டழைத்து முறைப்படி உபசரித்து ஆசனத்தமர்த்தி வணங்கினான். அப்போது நாரதர் அவனை நோக்கி, "கம்சா! உனக்குவரும் தீங்கை முன்னரே அசரீரி கூறியும் நீ அத்தெய்வ வாக்கினை மறந்தாய்; தேவகியிடத்தும் அவள் குழந்தைகளிடத்தும் தயை காட்டி வருகின்றாய்; இப்போது உன் அழிவுக் கேதுவாய் நடந்து வரும் காரியங்களை நீ உணராமலிருக்கின்றாய்; நீ முந்தின ஜன்மத்தில், காலநேமி என்னும் அசுரனாயிருந்து விஷ்ணுவினோடெதிர்த்து மரணமடைந்து இப்போது அரசனாய்ப் பிறந்திருக்கின்றாய்; முன் உன்னோடு கூடியிருந்த அசுரர்களெல்லோரும் அந்த அம்சத்துடனேயே உனக்குத் துணைவர்களாய் வந்து தோன்றியிருக்கின்றார்கள்; தேவர்கள் உங்களை ஒழிக்குமாறு விஷ்ணுவிடம் வேண்டிக்கொண்டார்கள்; அவர், தேவர்

களின் விருப்பப்படி உன்னையும், உன்னைச் சார்ந்தவர்களையும் ஒழித்தற்குத் தேவகியின் எட்டாவது கருப்பத்தில் உதிக்கப் போகின்றார்; அவருக்கு உதவியாயிருந்து உங்களை நாசஞ் செய்யும் பொருட்டு மற்ற தேவர்களும், தேவ ஸ்திரீகளும், கோகுலத்தில் நந்தகோபன் முதலிய கோபாலர்களாகவும், யசோதை முதலிய கோபிகா ஸ்திரீகளாகவும், வசுதேவர்முதலிய யதுகுல சிரேஷ்டர்களாகவும், தேவகி முதலிய யதுகுல ஸ்திரீகளாகவும் தோன்றியிருக்கிறார்கள்; இன்னும் பலர் தோன்றப்போகிறார்கள்; நீ முன் ஜாக்கிரதை யடைந்து உன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் மார்க்கத்தைத் தேடிக்கொள்வாயாக" என்று அவன் மனத்திற்குக் கலக்க முண்டாகும் வார்த்தைகளைக் கூறிப் போய்விட்டார்.

## 5. கம்சன் கொடுஞ் செயல்
## தேவகியும், வசுதேவரும் சிறைப்படல்

நாரதருடைய கலக வார்த்தைகளைக் கேட்டவுடன் கம்சன் திடுக்கிட்டு, "யாதவர்களும் கோபாலர்களும் எனக்கு விரோதிகளாகவா இருக்கின்றார்கள்; அவர்களை நான் ஒரு கை பார்க்கின்றேன்" என்று கடுஞ் சின மடைந்து கையில் வாளேந்திச் சென்று தேவகியின் ஆறு குழந்தைகளையும் வதைத்தான்; வசுதேவரையும் தேவகியையும் சிறைக்கூடத்திலடைத்து அவர்களுக்குக் கடுங்காவல் ஏற்படுத்தினான்; பிரலம்பன், பகாசுரன், சாணூரன், முஷ்டிகன், பூதனை, கேசி, தேனுகன் முதலியவர்களைத் தனக்குத் துணைவராகச் சேர்த்தான்; தன் தந்தை உக்கிரசேனனைச் சிம்மாசனத்தினின்றும் நீக்கிவிட்டுத் தானே அரசனாகி அச்சிம்மாசனத்திலமர்ந்தான்; வசுதேவருக்குப் பிள்ளைகள் பிறந்தால் உடனே அவற்றை

அவர், தன்னிடம் கொண்டு வந்து கொடுத்துவிட வேண்டு மென்று கடுங் கட்டளை பிறப்பித்தான். குழந்தைகள் பிறந்த வுடன் இவ்விவரத்தைத் தனக்குத் தெரிவிக்கும்படி காவலாளி களுக்கும் ஆக்ஞையிட்டான்; யாதவர்களேயும், ஆயர்களேயும், விஷ்ணு பக்தர்களாகிய முனிவர்களேயும் துன்புறுத்தி வந் தான். அவர்களுட் பலர் அத் துன்பத்தைச் சகிக்காமல் புற நாடுகளிற் சென்று மறைந்து வசித்து வந்தார்கள். சிலர், கம்சனுடைய கொடுஞ் செயல்களேச் சகித்துக் கொண்டு அவன் ஆளுகையிலேயே தங்கியிருந்தனர்.

கம்சன் இவ்வாறு எல்லோரையும் வருத்திவருங் காலத் தில், வசுதேவர் தம்முடைய மனைவி உரோகிணி கருக்கொண் டிருப்பதால் அவளுக்கும் கம்சனுல் அபாயமுண்டாதல் கூடு மென்று பயந்து, அவள் தம்முடைய நண்பனுகிய நந்த கோபன் வீட்டிற் போய் மறைந்திருக்கும்படியான ஏற் பாட்டை அந்த நந்தகோபனுடைய சகாயத்தால் சிறைவா சத்தி லிருந்தபடியே செய்துவிட்டார். அவள் அவ்வாறே அங்கு மறைந்திருந்தாள்.

## 6. பலராமர் அவதாரம்

அங்ஙன மிருக்குங் காலத்தில் வசுதேவர், தேவகி ஏழா வது கருப்பமடைந் திருப்பதைப் பார்த்து, "ஐயோ! இக் கருவிலுள்ள குழந்தை பிறந்தவுடனே அந்தப் பாதகனுகிய கம்சன் இப் பிள்ளேயையும் வதைத்து விடுவானே" என்று மனக் கலக்கத்துட னிருந்தார். அப்போது நந்தகோபன் வீட்டிலிருந்த உரோகிணி வாயு ரூபமான ஏழுமாதக் கருப்ப முடையவளா யிருந்தாள். அத்தருணத்தில் யோக மாயை, பகவான் தனக்கு முன்னுரைத்த கட்டளேப்படி உரோகிணி

யின் கருப்பத்தை நீக்கிவிட்டுத் தேவகியின் கருப்பத்தை அந்த உரோகிணியின் வயிற்றில் சேர்த்துவிட்டாள்.

தேவகியின் கருப்பம் மறைந்து விடவே அங்குள்ள காவலாளிகளும், மற்றையரும், 'கம்சனுடைய பயத்தால் இக்கருப்பம் கலைந்துபோயிற்று' என்று தீர்மானித்து அவ்விவரத்தைக் கம்சனுக்குத் தெரிவித்தார்கள். அவன், "அது கருவிலேயே தொலைந்தது நல்லதுதான்; இனி எட்டாவது குழந்தை பிறந்தால் அதிஜாக்கிரதையுடனிருந்து அவ்விவரத்தை எனக்கு உடனே தெரிவியுங்கள்" என்று அவர்களுக்குக் கட்டளையிட்டுவிட்டு மிகுந்த செருக்குடன் இருந்தான்.

பின்னர், யோக மாயையால் உரோகிணியின் வயிற்றிற் சேர்க்கப்பட்ட கருப்பத்தினின்றும் ஆதிசேஷன் அம்சமாய் வெண்மை நிறத்தோடு கூடிய ஒரு புத்திரன் பிறந்தான். இவனை நந்தகோபன் இரகசியமாக வளர்த்துவந்தான். இவன் பிறந்த செய்தி கேட்டு வசுதேவரும் மகிழ்ச்சியுற்றிருந்தார்.

## 7. ஸ்ரீ கிருஷ்ணாவதாரம்

அதன்மேல் சில மாதங்கள் சென்றபின் தேவகி எட்டாவது கருப்பத்தை அடைந்தாள். ஸ்ரீமந் நாராயணர் அதிற் பிரவேசித்தார். அங்ஙனம் பகவானை, வயிற்றில் தரித்த தேவகியைத் தேவர் பலவிதமாகத் துதித்துக் கொண்டாடினார்கள். இப்படி விண்ணவராலே தோத்திரஞ் செய்யப்பட்ட தேவகியின் கருவிலிருந்து தாமரைக் கண்ணனான எம்பெருமான் உலக ரக்ஷணைநிமித்தம் முன் சங்கற்பித்த விதமாக ஆவணி மாதத்தில் அமரபக்ஷத்தில் அஷ்டமி கூடின உரோகிணியில், இரவில், உலகம் உய்யும் பொருட்டு உதித்தனர். அத்தினமானது, யாவர்க்கும் மிகுந்த ஆனந்தத்தை விளை

வித்தது. சுவாமி அவதரித்ததும், சத் புருஷரெல்லோரும், களிப்பால் துள்ளியாடினர்; உக்கிரமான காற்று தணிவை யடைந்தது; நதிகள் தெளிவு பெற்றன; சமுத்திர கோஷம் இனிய வாத்தியத் தொனிபோன்று ஒலித்தது; கந்தருவர் பாடினர்; தேவர் பூமாரி பெய்தனர். அந்த நள்ளிரவிலே மேகங்களும் மெல்லெனக் கர்ச்சித்துப் புஷ்ப வருஷங்களை வருஷித்துக்கொண்டிருந்தன. அங்ஙனம் அவதரித்த பகவான், கருநெய்தற் பூப்போன்ற திருமேனியோடும், நான்கு திருத் தோள்களோடும், ஸ்ரீவச்ச மென்னும் மறுவிளங்கிய திருமார் போடும் தேவகிக்கும் வசுதேவருக்கும் காட்சியளித்தனர்.

வசுதேவரும், தேவகியும் இந்த அற்புதமான குழந்தை யைக் கண்டு அதிசயித்து, 'இவர் ஸ்ரீமந் நாராயணரே' என்று தீர்மானித்து, "சுவாமி! அடியேங்களுடைய பாக்கிய வசத் தினால் தேவரீர் இங்குத் திருவவதரித்தருளினீர்; நீர் இந்த ரூபத்துடனிருப்பதைக் கம்சன் காணின் எங்கட்கு மிகுந்த இடர் விளைவிப்பான்; ஆதலின் இந்த மனோகரமான ரூபத்தை மறைத்தருள வேண்டும்; சாதாரண குழந்தையாகவே மாற வேண்டும்; கம்சனால் எங்களுக்கு யாதொரு தீங்கும் நேரா திருக்குமாறு கிருபை புரியவேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள். பகவான் தேவகியைப் பார்த்து, "நீ பூர்வத் தில் என்னைப் போன்ற புத்திரன் வேண்டுமென்று கோரின படியால், நான் உன் வயிற்றிற் பிறந்து எனது யதார்த்த ரூபத்தை உனக்குக் காட்டினேன்; இனி உனது கருத்தின் படி சாதாரண குழந்தையாகவே தோன்றுகிறேன்" என்று சொல்லி, அவ்வாறே விளங்கியருளினர். அதே சமயத்தில் பக வானிட்ட கட்டளைப்படி யோகமாயை நந்தகோபனின் மனைவி யாகிய யசோதை வயிற்றில் பெண் குழந்தையாய் அமைந்-

திருந்தாள். அப்போது வசுதேவரும் தேவகியும் தங்கள் குழந்தையைப் பார்த்து, "ஐயோ! இந்த அருமைச் செல்வனைக் கொல்ல, கம்சன் விரைந்து வந்துவிடுவானே" என்று வருந்தினார்கள். அப்போது அத் தெய்விகக் குழந்தை அவர்களை நோக்கி, "நீங்கள் எதற்கும் அஞ்சவேண்டாம்; நந்தகோபன் மனையில் யசோதையிடம் ஒரு பெண் குழந்தை பிறக்கப்போகிறது. என்னைக் கொண்டுபோய் அங்கே விட்டு அந்தப் பெண்ணை இங்கே கொண்டுவந்து சேர்த்து விடுங்கள்; இக்காரியத்தைச் செய்யும்போது இங்குள்ள காவலும் விலங்கும் உங்களைத் தடுக்கமாட்டா" என்று கூறிற்று.

வசுதேவர் உடனே அக்குழந்தையை எடுத்துக் கொண்டு புறப்பட்டார். பகவான் கிருபையால் அவர் கால்களிற் பூட்டப்பட்டிருந்த விலங்குகள் நீங்கின; வாயில் காப்போர் நித்திரையில் மயங்கிக் கிடந்தனர். அப்போது மழை பெய்து கொண்டிருந்தது. அந்த மழை, குழந்தை மீதும், வசுதேவர் மீதும் படாவண்ணம் அவர்களுக்கு மேலே ஆதிசேஷன் தன் திருமுடியைக் கவித்த வண்ணம் கூடவே சென்றனன்.

அவ்வாறு குழந்தையை எடுத்துச் சென்ற வசுதேவர் யமுனா நதிக்குச் சமீபத்தில் நெருங்கினார். அப்போது சுழித்து ஓடா நின்ற ஆழமான தண்ணீருள்ள அந்த யமுனா நதியானது அவருக்கு முழங்கால் அளவாயிருந்தது. வசுதேவர் அதைக் கடந்து ஆயர்பாடிக்குச் சென்று யசோதையின் பள்ளியறைக்குட் புகுந்தார். அங்கும் பகவான் ஏவிய யோக மாயையின் செயலால் எல்லோரும் நித்திரையில் மயங்கிக் கிடந்தார்கள். அத்தருணத்தில் நந்தகோபருடைய பத்தினியான யசோதை யோகமாயையின் அம்சமான ஒரு கன்னிகையைப் பெற்றாள். பெற்றும் அந்த யோக மாயையால்

மயக்கமெய்திப் பிறந்தது இன்னதென்று தெரிந்துகொள்ளாமலே யிருந்தாள்.

இச்செயல்களைக் கண்ணுற்ற வசுதேவர் தடையொன்றுமின்றிச் சரேலென யசோதையிடம் போய், அவள் பக்கத்தில் தாம் ஏந்திவந்த பாலகனைக் கிடத்திவிட்டு, அவளுடைய குழந்தையாகிய கன்னிகையை யெடுத்துக்கொண்டு வந்துவிட்டார்.

வசுதேவர் அவ்வாறு தாமெடுத்துச் சென்ற பெண் குழந்தையைத் தேவகியின் படுக்கையில் சேர்த்தார். விலங்குகள் முன்போல அவர் கால்களில் சேர்ந்துகொண்டன; கதவுகளும் முன்போலவே மூடிக்கொண்டன; காவலாளிகளும் விழித்துக் கொண்டார்கள். அப்போது அக்குழந்தை அழத் தொடங்கிற்று. அழுகைக் குரல் கேட்டவுடனே காவலர்கள் கம்சனிடம் விரைந்தோடித் தேவகிக்குப் பிள்ளை பிறந்ததென்று தெரிவித்தார்கள். அதைக் கேட்டதும் கம்சன் வாளாயுதத்துடன், குழந்தையிருக்குமிடத்திற்குஓடிவந்தான். அப்போது தேவகி, "அண்ணா! இது பெண் குழந்தை; இதனாலுனக்கு என்ன தீங்கு வரப்போகிறது? இதைக் கொல்ல வேண்டாம்" என்று பரிதாபக் குரலுடன் பரிந்து அவனை வேண்டினாள். அவன் அந்த மொழிகளைச் செவிக்கொள்ளாமல் அப் பெண் குழந்தையைக் கையிலெடுத்து பாறாங்கல்லின்மேல் மோதிக் கொல்ல நினைத்து மேலே தூக்கி ஓங்கினான். அப் பெண் குழவி, யோகமாயையின் அம்சமாதலால் அவன் கையினின்றும் விடுபட்டு எழும்பி வானத்திற் போய் ஆயுதங்களோடு கூடின எட்டுக்கைகளுள்ள காளிரூபத்துடன் நின்று, வெகு கோபத்தோடு பேரிரைச்சலிட்டுச் சிரித்து, கம்சனை நோக்கி, "மூடாத்துமாவே! என்னைக்

கொல்வதால் உனக்கு வரும் பயன்யாது? உன்னைக் கொல்லு கிறவன் பிறந்து வேறோர் இடத்தில் வளருகிறான்; அவன்றான் ஆதியம் பகவன்; தேவர்கள் வணங்கத் தக்கவன்; அவனே உனக்குப் பூர்வ ஜன்மத்திலும் சத்துரு; என்னைக் கொல்லல் உன்னாலாகாது" என்று சொல்லி மறைந்து விட்டது.

## 8. கம்சனுடைய சதியாலோசனை

காளி வடிவமான குழந்தை அவ்வாறு கூறிச் சென்ற வுடனே கம்சனுக்கு மனதில் திகிலுண்டாயிற்று. உடனே அவன், தனது நண்பரான பிரலம்பன், கேசி முதலிய மகா அசுரரை யெல்லாம் வரவழைத்து அவர்களை நோக்கி, "பெருமை பொருந்திய புஜங்களையுடைய ஓ பிரலம்பனே! கேசியே! தேனுகனே! பூதனையே! அரிஷ்டன் முதலான சூரர்களே! நானிப்போது உங்கள் உதவியை நாடியிருக்கி றேன்; ஆகையால் நீங்களிப்போ தெனக்குப் பக்கத் துணை யாயிருந்து என் சொற்படி நடக்கவேண்டும்.

"துராத்துமாக்களான தேவர்கள் என்னைக் கொல்ல எத் தனஞ் செய்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் என் பராக்கிர மத்திற் கெதிர் நிற்கமாட்டார்கள்; அற்ப வீரத்துவமுள்ள இந்திரனால் என்ன முடியும்? தவசியாய்த் திரிகிற சிவன்றான் என்ன செய்யக்கூடும்? சோர்ந்திருக்கும் சமயம் பார்த்து அசுரரைக் கொல்லும் சூதனான விஷ்ணுதான் என்ன செய்ய மாட்டுவான்? இவர்களால் ஒன்றுஞ் செய்ய வியலாது; இவர் களையே நான் ஒரு திரணமாக மதித்திருக்கும்போது மற்ற தேவர்களெனக் கெம்மாத்திரம்! ஒரு சமயம் இந்திரன் எனது இராச்சியத்தில் மழை பெய்யாதிருக்கச் சூழ்ச்சி செய்தான்; அப்போது நான் பாணங்களினாலே மேகங்களைப் பிளந்து

வேண்டியமட்டும் மழை பெய்வித்துக்கொண்டேன்; அது நீங்களறிந்ததே.

இன்னும் இந்த நிலவுலகில்லென் மாமனாரான ஜராசந்த மகாராஜா தவிர மற்ற அரசர்களெல்லாம் எனக்குக் கீழ்ப்பட்டவர்களே, அவர்களுள் எவர்தாம் என்புஜபலத்துக்கு அஞ்சி

வணங்காதிருக்கிறார்கள் ?

ரதையாகவே இருக்கவேண்டும்; ஊக்கத்தைக் கை சோர விடலாகாது; நாமே அவர்களுக்குத் துன்பம் புரிய முந்த வேண்டும்; நான் இன்னமொன்று சொல்லுகிறேன் கேளுங்கள். என் தங்கை தேவகி வயிற்றிற் பிறந்த பெண், எனக்கு மிருத்யுவா யிருக்கிறவன் முன்னதாகவே பிறந்து வளர்ந்து வருகிறானென்று கூறிப் போயினள். ஆதலால் இந்தப் பூமியிலே பிறந்திருக்கிற குழந்தைகளையெல்லாம் தந்திரமாய்க் கொன்றுவிட வேண்டும்; இந்த விஷயத்தில் நீங்கள் எச்சரிக்கையாயிருந்து வேலை செய்வீர்களென்று நான் நம்புகிறேன்" என்று சொல்லி, தேவகியையும் வசுதேவரையும் காவலினின்றும் விடுவித்து, அவர்களை நோக்கி, "நான் ஆராய்ந்து பாராமல் உங்களைக் காவலில் வைத்தேன். அனியாயமாய்— உங்கள் குழந்தைகளையும் கொன்றேன்; எனக்கு விரோதி வேறெங்கேயோ பிறந்து வளர்கிறானும்; அவனை நான் கவனித்துக் கொள்ளுகிறேன்; நீங்கள் ஆயாசப்படாமல் சுகமாயிருங்கள்" என்று மொழிந்து அவர்களைத் தேற்றித் தன் மாளிகைக்குச் சென்று, அரசர்களுக்கும், முனிவர்களுக்கும் தீங்கு செய்யும்படி பல அசுரரை ஏவினான். குழந்தைகளைக் கொல்லும்படி பூதனையை ஏவினான்.

## 9. ஆயர் கொண்டாட்டம்

கம்சன் செய்கை இப்படியிருக்க, முன்னுரைத்தபடி வசுதேவர் தம் குழந்தையை யசோதையிடம் வைத்துவிட்டு அவள் குழந்தையை எடுத்து வந்தபின், யசோதை மயக்கந் தெளிந்து பக்கத்தில் ஆண் குழந்தை கிடக்கக்கண்டு மகன் பிறந்தானென்று மகிழ்ந்தாள். இந்த விசேஷத்தை நந்தகோபன் உணர்ந்து புத்திரோற்சவங் கொண்டாடினன். மற்ற கோபால சிரேஷ்டரும், ஆயர்மாதரும், தங்களரசனுக்குப் புத்திரபாக்கியம் உண்டானதை யுணர்ந்து அதன் பொருட்டு ஆனந்த சாகரத்தில் முழுகினர்கள்; வாசனைப் பொடிகளை ஒருவர்மீதொருவர் தூவிக்கொண்டார்கள்; "எங்கள் இளவரசர் எங்கே?" என்று திரண்டு நந்தகோபன் மாளிகைக்கு வந்தார்கள்; சிலர் பாடினர்கள்; சிலர் பறை கொட்டினர்கள்; சிலர் ஆடினர்கள்; மற்றுஞ் சிலர் குழந்தையைப் பார்த்து, "இவனே ஆண்மகன்; இவனுக்கீடாவார் எங்குமில்லை; திருவோணத்தானாகிய நாராயணன் இவனே" என்று கொண்டாடினர்கள். அங்கிருந்த உரோகிணியும் தன் புதல்வனுக்குத் துணைவன் பிறந்தானென்றும் பெரு மகிழ்ச்சியடைந்தாள்.

யசோதாதேவி அப்பாலகனுக்கு நீராட்டுவித்துப் பசுஞ் சிறுமஞ்சளால் அக்குழந்தையின் நாவை வழித்தாள். அச்சமயத்தில் குழந்தை தன் வாயை நன்றாகத் திறந்தது. அந்த வாய்க்குள் வையகங்களேழும் காணப்பட்டன. அவற்றைக் கண்டதும் அவள் ஆச்சரியப்பட்டாள். ஆராய்ச்சியர் எல்லோரையும் அழைத்து அவர்களுக்கு அந்த அதிசயத்தைக் காட்டினள். அவர்கள், "இந்த அற்புத பாலகன் ஆயர் புத்திரனல்லன்; மாயனே" என்று மகிழ்ந்தனர்.

பன்னிரண்டு தினங்களானதும் ஆயர்கள் ஊரை யலங்கரித்துப் பெருவிழாக் கொண்டாடினார்கள்; அப்பிள்ளையை ஒவ்வொருவரும் தம்தம் கைகளில் எடுத்து வாழ்த்திக்கொண்டாடினார்கள்; பிறகு பாதாதிகேச பரியந்தம் பொன்னும் மணியும் இழைத்த பூஷணங்களைப் பூட்டினார்கள்; அந்தச் செல்வக்குழந்தையின் அவயவங்களின் அழகைக்கண்டுபுகழ்ந்தார்கள். மாணிக்கமும், வயிரமும் பதித்து ஆணிப் பொன்னாற் செய்த அழகிய தொட்டிலில் அப்பிள்ளையைச் சேர்த்துத் தாலாட்டினார்கள்.

தாய்மார் முதலானவர்கள் பிள்ளையைத் தங்கள்கையால் அசைத்தாடும் விளையாட்டையுஞ் செய்து வந்தார்கள். இப்படி ஆயர்பாடியில் மகப் பேற்றின் கொண்டாட்டம் நடந்து கொண்டிருந்தது.

அக்காலத்தில், நந்தகோபன், கம்சனுடைய ஆளுகைக்குட்பட்டவனதலால், தான் அவனுக்குச் செலுத்தவேண்டிய கப்பத்தைச் செலுத்துதற்கு மதுரைக்குப்போய் அதனை அவனிடம் சேர்த்துவிட்டு ஓரிடத்தில் தங்கியிருந்தான்.

அப்போது கம்சனால் விடுதலை செய்யப்பட்ட வசுதேவர், அந்த நந்தகோபனிடம் நேரில் சென்று தம் புத்திரர்களின் சுகத்தை விசாரிக்கவும், அவர்கட்குக் கம்சனால் வரும் அபாயத்தைத் தடுக்கும் பொருட்டு அவனை விரைவில் கோகுலத்திற்கனுப்பவும் கருதி, அவன் இறங்கியிருந்த இடத்திற்குப் போய் அவனைக் கண்டு, "நந்தகோபரே! பகவத் சங்கற்பத்தால் உமக்குப் புத்திர சந்தான முண்டானதை நான் உணர்ந்தேன்; அதைப்பற்றி நான் மிகவும் சந்தோஷ மடைகிறேன்; இந்தப் புத்திரப்பேறு உமக்கு இம்முதுமைப் பருவத்தில் கிடைத்தது உமது தவப்பயனே; நீர் கம்சனுக்குச் செலுத்த

வேண்டிய கப்பமுற்றுஞ் செலுத்தி விட்டீர்; இனி நீர் இங் கிருப்பது நன்றன்று; கம்சன் கொடுங்கோலரசன்; பொரு ளுள்ளவர் கொடுங்கோலரசரின் சமீபத்தி லிருத்தலாகாது; 'கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டில், கடும்புலி வாழும் காடு நன்றே' என்று பெரியோர் கூறுகின்றனர்; அந்தத் துஷ்டனால் அபாயம் நேரிடக் கூடும்; ஆகையால் உடனே நீர் கோகுலம்போய்ச் சேர்வீராக; எனக்கு உரோகிணியின் வயிற் றிற் பிறந்த குழந்தை யொன்று அங்கே இருக்கிற தன்றோ? அதை நீர் உமது பிள்ளையைப்போலாதரித்து வரவேண்டும்; நான் என்னவோ சொன்னேனென்று பராமுகமா யிராதீர்'' என்று அன்புடன் கூறிவிட்டுத் தம்மிடத்திற்குச் சென்றார். நந்தகோபன் தன்னைச் சார்ந்தவர்களுடன் வண்டிகளில் சாமக் கிரியைகளை ஏற்றிக்கொண்டு கோகுலத்திற்குப் புறப்பட்டுப் போனான்.

## 10. பூதனையின் வதை

முன் உரைத்தவாறு கம்சனால் அனுப்பப்பட்டவர்களுள் பூதனை யென்னும் இராக்ஷசி, நல்ல பெண்ணுருவங்கொண்டு இராக்காலங்களில் நினைத்த இடங்களிற் சென்று, சிறு குழந் தைகளுக்குப் பால் கொடுத்து அவற்றைக் கொன்றுவந் தாள். அவ்வாறு கொல்லுவது அவளுக்கொரு சிறு விளையாட் டாக இருந்தது. அவள், கம்சன், தனக்கிட்ட கட்டளையை நிறைவேற்றுவதற்குக் கோகுலத்துக்கும் போனாள்.

அவ்வாறு சென்றவள், தேவதா ஸ்திரீகளும் இவளுக்கு நேராக மாட்டார்களென்று, யாவரும் அதிசயிக்கும்படி சௌந்தரிய ரூபமெடுத்துக்கொண்டு கோகுலத்தின் அழகைப் பார்ப்பவள்போல அங்குமிங்குஞ் சுற்றித்திரிந்தாள். கடைசியில்

நந்தகோபருடைய மாளிகையிற் பிரவேசித்தாள். அப்போது யசோதையின் குழந்தை தொட்டிலிற் படுத்திருந்தது. பூதனை அதன் சமீபத்தில் நெருங்கினாள். அவள் வரவை யுணர்ந்த குழந்தை அவளுடைய வஞ்சனையைத் தெரிந்துகொண்டு அவளுயிரைப் போக்குதற்கு, பால் குடிக்க அழுவதுபோலக் கைகால்களை உதறிக்கொண்டு, அழத் தொடங்கிற்று. பூதனை அக்குழந்தையிடம் பரிவுள்ளவள்போல், "இப்படியும் சிறு குழந்தையை அழவிடலாமோ? பசி பொறுக்கமுடியாமலன்றோ இது அழுகிறது; ஐயோ! என் கண்ணே! பொன்னே! மணியே! அணியே!" எனறுசொல்லிக்கொண்டே அக்குழந்தையை யெடுத்து, உச்சிமோந்து, முத்தமிட்டு, மார்போடணைத்து அதற்குப் பால் கொடுக்கலானாள். குழந்தை, அதிக ஆவலோடு பால் குடிப்பதுபோல அவளுயிரையும் உறிஞ்சிவிட்டது. அவள், தன் இயல்பான குரலோடு பேரிரைச்சலிட்டுக்கொண்டு கீழே விழுந்தாள்; விழுந்ததும் அவளுடைய பொய்யுருவம் மறைந்து போயிற்று; அவள் பயங்கரமான ரூபத்துடன் உயிர் துறந்தாள். அவள் கூவிய இரைச்சலைக் கேட்டு, யசோதையும், உரோகிணியும், இடைச் சேரியிலுள்ள எல்லோரும் அங்கு ஓடி வந்தார்கள். பேயாகிய பூதனையின் மடியில் குழந்தை யிருந்தது; அவள் செத்துக் கிடந்தாள்.

யசோதை பரபரப்போடு, "என் அருமை மகனே!" என்று பாலகனை வாரியெடுத்து, அவனுக்கு அப்பேயினாலுண்டான தோஷத்திற்குச் சில பரிகாரங்களைச் செய்தாள். அப்போது மதுரையிலிருந்து திரும்பிய நந்தகோபரும் வந்து, நடந்ததை அறிந்து வியப்புற்றுக் கோமய சூரணத்தைச் சிசுவின் சிரத்தில் காப்பாக வைத்தார். "எந்தப் பகவானுடைய

நாபிக் கமலத்தினின்றும் எல்லா உலகங்களும் உண்டாயி னவோ, அந்த ஸ்ரீ ஹரிபகவான் இக்குழந்தையைஇரக்ஷிக்கக் கடவன்'' என்று அனந்த விதமாக ஸ்ரீமந் நாராயணனைத் தோத்திரஞ் செய்தார். மற்றவர்கள் குழந்தையை நோக்கி, "உன் சிரத்தைக் கோவிந்தன் காக்க; கண்டத்தைக் கேசவன் காக்க; உதரத்தை விஷ்ணு காக்க; மற்ற அவயவங்களை நாராயணன் ரக்ஷிக்க'' என்று சொல்லிப் பகவானைப் பல வாறு துதி செய்தார்கள். பின்னர் குழந்தையை இரத் தின மயமான தொட்டிலில் வளர்த்தி, "பெற்ற தாயைப் போல் வந்த பேய்ச்சியானவள் தந்த பேரமுதை அவளு யிரோடு வற்ற வாங்கி யுண்ட வாயனே! சாமார்த்திய முள்ள மாயனே! அன்பர்க் கினிய நேயனே! எங்கள் ஆயனே! நீ சுகமாய்க் கண்வளரக் கடவாய்'' என்று பாடினார்கள். அப் பால் பூதனையின் கோர ரூபத்தையும், அவளுடைய கொடிய குணத்தையும் பற்றி ஆச்சரியமுற்றுப் பேசினார்கள். பின்னர் குழந்தையை ஜாக்கிரதையாகப் பார்த்து வரத் தக்க ஏற்பாடு களைச் செய்தார்கள்.

## 11. சகடாசுர வதை

பூதனை இறந்த செய்தி கம்சனுக்குத் தெரிந்தது. அதன்மேல் அவன், "கோகுலத்திலிருக்கும் அக்குழந்தை, பூதனையைக் கொன்றபடியால் அதுவே அசரீரி சொன்ன குழந்தையா யிருக்கலாம்; ஆதலின், அதனை எப்படியும் கொல்லும் உபாயத்தை நாம் தேடவேண்டும்'' என்று வேறு சில அசுரர்களை வரவழைத்து, அவர்களை நோக்கி, "நீங்கள் கோகுலத்திற்குச் சென்று அங்கு நந்தகோபன் வீட்டில் வளரும் சிறுவனைக் கொன்று வாருங்கள்'' என்று கட்டளை

யிட்டான். அவர்கள் அவ்வாறே ஆயர்பாடிக்குச் சென்றார்கள்.

அப்போது, யசோதை, தன் புத்திரனுடைய ஜன்ம நக்ஷத்திரம் வந்தபடியால் அதன்பொருட்டு அப்புதல்வனுக்கு மங்களஸ்நானம் செய்வித்துப் பாலூட்டிப் பொன்னாலாகிய தொட்டிலில் அக்குழந்தையைப் படுக்கவைத்துவிட்டு, அந்த ஜன்ம நக்ஷத்திரக் கொண்டாட்டத்திற்கு வந்திருந்தவர்களை, மற்றொரு பக்கத்தில் உபசரித்துக்கொண்டிருந்தாள். குழந்தை கண் அயர்ந்து நித்திரை செய்தது. குழந்தை படுத்திருந்த தொட்டிலி னருகில் ஒரு சகடம் விடப்பட்டிருந்தது. கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஒருவன் அச் சகடத்தில் சேர்ந்து மறைந்து சிசுவைக் கொல்லும் சமயத்தை எதிர்பார்த்திருந்தான்.

சகட்டின் பக்கத்தில் கண்வளர்ந்திருந்த யசோதை பாலகன் அந்தச் சகட்டில் அவ்வசுரன் வந்து மறைந்திருந்ததை அறிந்தான். அவ்வாறு அச் சூதைத் தெரிந்துகொண்ட பாலன், பாலருந்த அழுகிற பாவனையாய்த் தனது சிறிய திருவடிகளை மேலே தூக்கினான்; அவை சகட்டின்மேல் பலமாய் மோதின. சகடானது உடனே உடைந்து கீழே விழுந்தது. விழுந்த மாத்திரத்தில், அதிலிருந்த அசுரன் பெருத்த சத்தமிட்டு மாண்டான். நந்தகோபர், யசோதை முதலிய இடையரும், இடைச்சியரும் அவ்வொலியைக் கேட்டு என்ன என்னவென்று ஓடி வந்தார்கள். அப்போது குழந்தை மல்லாந்து படுத்திருந்தது; சகடு தரையில் முறிந்து விழுந்து கிடந்தது. ஓடி வந்தவர்கள், அவற்றைக்கண்டு ஒன்றுந் தோன்றாது திகைத்தார்கள்; "யார் இந்தச் சகட்டை இவ்வாறு திருப்பி ஒடித்தார்கள்" என்று அங்கு விளையாடிக் கொண்

டிருந்த சிறுவர்களிடம் கேட்டார்கள். அவர்கள், "இந்தக் குழந்தை அழுது கொண்டே காலைத் தூக்கி இதன் மேல் உதைத்தது; அதனாலே சகடு திரும்பி முறிந்து கீழே விழுந்தது; இதை நாங்கள் பிரத்தியட்சமாகப் பார்த்தோம்" என்றார்கள். அது கேட்ட கோவலர் வியப்படைந்தனர். நந்தகோபரும், யசோதையும், ஆச்சரியமுற்றுக் குழந்தையை அவ்வாபத்தினின்றும் காப்பாற்றிய பகவானைத் துதித்தார்கள்.

## 12. திருணாவர்த்த வதை

அதன்மேல் ஒருநாள், யசோதை, குழந்தையை மடிமீது வைத்துக்கொண் டிருக்கும்போது, அப்பிள்ளை தாங்கமுடியாத பாரமாயிருந்தது. அதனால் அவள், "குழந்தைக்கு ஏதோ நோயுண்டா யிருக்கிறது; இதை பகவான் தீர்த்தருள வேண்டும்" என்று ஆதிமூர்த்தியைத் துதித்து, அக்குழந்தையைக் கீழே யிறக்கிவிட்டுப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள்.

அத்தருணத்தில் கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களில் திருணாவர்த்த னென்பவன் அங்கே வந்து, 'இக் குழந்தையைக் கொல்ல இதுதான் தருணம்' என்று தன் மாயையால் பெருங் காற்றை யுண்டாக்கினான். அக்காற்று எங்கும் தூளிகளைப் பரப்பி ஆகாயத்தை மூடிப் பலமாக வீசிற்று. அதனால் ஆயர்கள், ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியாமல் மயங்கினார்கள். அப்போது அவ்வசுரன் ஒரு சுழல்காற்று ரூபமாக வந்து, யசோதை பக்கத்தில் விட்டிருந்த குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஆகாயத்திற் சென்றான். யசோதை, தடவிப் பார்த்துப் பக்கத்திலிருந்த குழந்தையைக் காணாமல் வருந்தி அழுதாள்.

அசுரன் குழந்தையைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்திற் சென்றபோது அக்குழந்தை அவனால் தூக்கமுடியாத பாரமா யிருந்தது. மேலும் மேலும் பாரம் அதிகமாயிற்று. அவ் வசுரன் அச்சுமையைத் தாங்கமுடியாமல் பயந்து அக்குழந்தை யைக் கீழேவிட முயன்றான். அவன் முயன்றும் குழந்தை அவனை விடவில்லை. அவன் கழுத்தை இறுகப்பிடித்து நெருக் கிற்று. அவன் கண் விழிகள் பிதுங்கி ஒரு பாறையின் மீது வீழ்ந்து மாண்டான். குழந்தை அவன் மார்பின்மீது ஏறி விளையாடிக்கொண் டிருந்தது.

அப்போது மாயக்காற்று அடங்கிற்று. கோபிகைகள், அசுரர் மார்பிலேறி விளையாடிக் கொண்டிருந்த குழந்தை யைக் கண்டு எடுத்து யசோதையினிடம் கொடுத்தார்கள். யசோதை, நந்தகோபர், முதலியவர்கள், அசுரன் மாண்டு கிடப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்து, அவனால் குழந்தை பயந்திருக்குமென்று அதற்குத் தக்க பரிகாரங்களைச் செய் தார்கள். நந்தகோபர் வசுதேவர் சொன்னதை நினைந்து அசுர ரால் குழந்தைக்கு அபாயம் நேருமென்று துணிந்து அதன் மேல் பிள்ளையை வெகு ஜாக்கிரதையாகப் பாதுகாத்துவந்தார்.

## 13. யசோதை புதல்வனுக்கும், உரோகிணி புத்திரனுக்கும் நாமகரணம்

இவ்வாறு நந்தகோபர் முதலியவர்கள் குழந்தையைப் பாதுகாத்து வருங்காலத்தில் வசுதேவர் கார்க்கேயர் என்கிற தமது புரோகிதரிடத்தில், "நம்முடைய குழந்தைகள் இருவர் கோகுலத்தில் நந்தகோபர் வீட்டில் வளர்கிறார்கள்; நீர் கம்ச னுக்குத் தெரியாமல் இரகசியமாக அங்கு சென்று அவர்க ளுக்கு நாமகரணம் முதலிய சடங்குகளைச் செய்து வரவேண்

டும்'' என்று சொன்னார். அவர் அவ்வாறே ஒரு நாள் நந்த கோபரிடம் சென்றார். நந்தகோபர் அவரைக் கண்டு வணங்கி, அக்குழந்தைகளுக்கு நாமகரணஞ் செய்யுமாறு வேண்டினார். அவர் சுப முகூர்த்தத்தில் விதிப்படி நாமகரணத்திற்குச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்து, உரோகிணியின் புத்திரனுக்குப் பலராமனென்றும், யசோதை புத்திரனுக்குக் கிருஷ்ணன் என்றும் திருநாமங்கள் இட்டு, நந்தகோபரிடம் வெகுமதியும், விடையும் பெற்று மதுரைக்குச் சென்றனர்.

## 14. பாலகிருஷ்ணன் திருவிளையாட்டு

கிருஷ்ணனும், பலராமனும் இவ்வாறு நாமகரணம் செய்யப்பெற்ற பின்பு தவழும் பருவத்தையடைந்து பாதங்களில் அணியப்பட்ட தண்டை, சிலம்பு முதலிய ஆபரணங்கள் ஒலிக்கவும், இடையிற் கட்டிய அரைஞாண் நழுவவும் தவழ்ந்து, தெருவில் நடக்கிறவர்கள் பின்சென்றும், பயந்தவர்களைப்போல் திரும்பித் தாய்மார்களிடம் ஓடிவந்தும், புழுதியிற் புரண்டும் விளையாடி வந்தார்கள். அவ்வாறு விளையாடி வரும்போதெல்லாம் யசோதையும், உரோகிணியும் அவர்களையெடுத்து, அவர்களின் உடலிற்படிந்த புழுதியைத் துடைத்துக் குளிப்பாட்டி அலங்கரித்து மடியில் வைத்து மகிழ்ந்து வந்தார்கள்.

பின்னர் அவர்கள் நடக்கும் பருவத்தை அடைந்தவுடன், தெருவில் சென்று பசுங்கன்றுகளின் வாலைப் பிடித்திழுத்தும், அவைகள் தங்களையும் இழுத்துக்கொண்டு ஓடத் தாங்களும் ஓடியும், மான் கொம்புகளைப் பிடித்திழுத்தும், பூனைகளின் வாயிற் கையை நீட்டியும், நெருப்பைத் தொட்டும்; ஓடுகிற பாம்பை மிதித்தும் பற்பல பயமறியாச் செயல்

களைச் செய்து விளையாடினார்கள். தாய்மாரும், தந்தையும் அவற்றைக் கண்டு அதிசயித்து மகிழ்ந்தார்கள்.

அதன்மேல் கிருஷ்ணன், பலராமனையும் பல ஆயச் சிறுவர்களையும் துணைவராகச் சேர்த்துக்கொண்டு, விளையாட்டுக்களுக்குத் தானே தலைவனாயிருந்து, கோபிகைகளின் வீடுகள் தோறும் மறைந்து சென்று தயிர், பால், வெண்ணெய்களை வாரியுண்டு, தன்னோடு சேர்ந்த பிள்ளைகளுக்கும் கொடுத்தும், பூனைகளுக்கும், குரங்குகளுக்கும் கொடுத்தும், கைக்கொட்டிக் கூத்தாடியும், இடைச்சியர்கள் கண்டபோது வெளியில் ஓடியும், சில வீடுகளிற் புகுந்து அங்கே கட்டப்பட்டிருக்கும் கன்றுகளை ஆவித்துத் துரத்தியும், ஆச்சியர் அதனைக் கண்டபோது எதிர் நின்று நகைத்தும், சில வீடுகளில் ஆய்ச்சியர் தனக்குப் பயந்து எட்டாமலிருக்கும்படி தயிர், பால், வெண்ணெய் முதலியவற்றை உயர்ந்த உறியின்மீது வைக்க, உரலை உருட்டிக் கொண்டுபோய் அதனடியிற் போட்டு அதன் மீதேறியும், மணைமீது மணை அடுக்கி அவற்றிமேலேயும், பாண்டங்களை அடுக்கி அவற்றின்மீதேறியும், அந்த வெண்ணெய் முதலியவற்றை அள்ளியுண்டும், தயிர்ப்பானைகளை உடைத்துச் சிதறியும், ஆயச்சிறுவர்களை அடித்தும், சில இல்லங்களிற் புகுந்து வெண்ணெயை எடுத்து வைத்துக்கொண்டு ஒரு மூலையிலிருந்து புசித்தும், ஆய்ச்சியர் அப்போது தன்னைக் கண்டு, "யாரடா திருடா!" என்று நெருங்கினால் தன் கையிலிருக்கும் எச்சில் வெண்ணெயை அவர்களின் வாயில் தடவிவிட்டு ஓடியும், ஆயர்களும், ஆய்ச்சியரும் தூங்கும்போது இருவர் சிகைகளை ஒன்றாகச் சேர்த்து முடிந்து அவர்களை எழுப்பிவிட்டு வேடிக்கை பார்த்தும், அவர்கள், 'பிடி! பிடி!' என்று துரத்தும்போது அவர்களுடைய கைக்கு அகப்படா

மல் ஓடியும், இடையர் பசுவின் பால் கறக்குமுன் கன்றை அவிழ்த்து விட்டுப் பாலையெல்லாம் குடிக்கும்படி செய்தும், இன்னும் பல குழந்தை விளையாட்டுக்களை நடத்தி வந்தான்.

இவனுடைய செய்கைகளைக்கண்ட ஆய்ச்சியர் பலமுறை யசோதையிடம் வந்து, "எங்கள் தலைவியே! உன் புதல்வன் கிருஷ்ணன் எங்கள் இல்லங்களிற் புகுந்து பல அடாச் செயல்களைப் புரிந்து நஷ்டங்களை உண்டுபண்ணுகிறான்; வெண்ணெயைத் திருடுகிறான்; பாலைப் பருகுகிறான்; தயிரைச் சிதறுகிறான்; பானையை உடைக்கிறான்; எங்களைக் கண்டால் நகைக்கிறான். நாங்கள் அவனைப் பிடிக்க முயன்றால் அவன் எங்களிடம் அகப்படாமல் ஒரே பாய்ச்சலில் ஓடி வந்து விடுகிறான்; அவனைக் கொஞ்சம் அடக்கிவை" என்று முறையிட்டார்கள்.

அவர்களுடைய வார்த்தைகளைக்கேட்ட யசோதை கிருஷ்ணனை நோக்கி, "அடா கிருஷ்ணா! உனக்கேன் இந்தத் துடுக்கு? இனி இத்தகைய துஷ்டக் காரியங்களைச் நீ செய்வாயானால் நான் உன்னை அடிப்பேன்" என்று பயமுறுத்தினாள்.

அப்போது கிருஷ்ணன், "அம்மா! இவர்கள் கோள் சொல்லுகிறார்கள்; தயிர்ப்பானையைப் பூனை தள்ளி உடைக்க நான் உடைத்தேனென்று சொல்லுகிறார்கள்; பூனை பாலைக் குடித்து விட்டுப்போக நான் குடித்தேனென்கிறார்கள்" என்று மழலைச்சொற்களால் யசோதையின் மனமுருக மொழிந்தான்.

யசோதை கோபம் மாறி, "இனி இவன் வந்தால் இவனைக் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வாருங்கள்" என்று ஆய்ச்சியருக்குச் சமாதானங் கூறி அவர்களை அனுப்பினாள்.

அதன்மேல் கிருஷ்ணன் ஒரு நாள் ஆய்ச்சியர்களை ஏமாற்றக் கருதி, அவர்களின் வீடுகளில் நுழைந்து வெண்ணெயை அள்ளியுண்டான். அப்போது அவர்கள் கண்டு

அவனைப் பிடிக்க ஓடினார்கள். கிருஷ்ணன் ஓட்டங்காட்டி, ஓட முடியாமல் இளைத்தவன்போல் அவர்கள் கையில் அகப் பட்டுக்கொண்டான். அவர்கள், "திருடா! இன்று சிக்கிக் கொண்டாய்; வா யசோதையிடம்" என்று அவன் கைகளைக் கட்டி அவனை அழைத்துக்கொண்டு போனார்கள். யசோதை சமீபத்தில் போனவுடன் கிருஷ்ணன் அவர்களை மயக்கி அவர்கள் கையினின்றும் விடுபட்டுத் தாயின் மடியிலிருந்து பால் குடித்துக் கொண்டிருந்தான். ஆய்ச்சியர், தங்கள் கையில் கிருஷ்ணன் இல்லாமல், தாங்கள் வருவதற்கு முந் தியே யசோதையிடம் இருப்பவன்போல் பால் குடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து, வெட்கி, "இந்தக் கிருஷ்ணன் மகா மாயக்காரனம்மா!" என்று சொல்லி அதிசயித்து யசோ தையிடம் ஒன்றும் சொல்லாமல் போய்விட்டார்கள்.

## 15. கிருஷ்ணன் வாய்க்குள் பிரபஞ்சம் காட்டல்

பிறகு ஒரு நாள் கிருஷ்ணன், பலராமனும் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது கிருஷ்ணன் மண்ணைவாரிச் சாதாரண குழந்தைகள் தின்பதுபோல் தின்று அபிநயங் காட்டினான். அதைப் பலராமனும், மற்ற ஆய்ச்சிறு வர்களும் பார்த்து யசோதையிடம் ஓடிவந்து, "அம்மா! கிருஷ்ணன் மண்ணைத் தின்னுகிறான்" என்று சொன்னார்கள். யசோதை கோபத்துடன் போய்க் கிருஷ்ணனை கரத்தைப் பற்றிக்கொண்டு, "அடே கிருஷ்ணா! நீ துஷ்டக்காரியங்களையே செய்து வருகின்றாய்; முன், இடைச்சியர் தயிர்க்குடங் களை யெல்லாம் உடைத்து வெண்ணெய் திருடியுண்டு அவர் கள் வந்து என்னிடம் முறையிடும்படி செய்தாய்; இப்போது மண்ணைத் தின்கிறாய்; இது வயிற்றுக்காகுமா? இனி நான்

உன்னைத் தண்டிக்காமல் விடேன்" என்று சொல்லி அவனுக்குப் பயங்காட்டினாள்.

அப்போது கிருஷ்ணன் தாய்க்குப் பயந்தவன்போல் அவளை நோக்கி, "அம்மா! நான் மண்ணைத் தின்னவில்லை; என் தோழர்கள் பொய் சொல்லுகிறார்கள்; என் வாயில் மண்ணிருக்கிறதாவென்று நீயே பார்" என்று வாயைத் திறந்து அவளுக்குக் காட்டினான்.

யசோதை பார்த்தாள். அந்த வாய்க்குள் பிரபஞ்ச முழுவதும், கோகுலமும், தன் உருவமும், கிருஷ்ண பலராமர் உருவங்களும், மற்றுமுள்ள யாவும் அவளுக்குத் தெரிந்தன. அவள் அவற்றைக் கண்டு பிரமித்து மதிமயங்கிக கனவு கண்டவள் போலிருந்தாள். உடனே அவைகள் மறைந்தன; பின் யசோதை சொப்பனங்கண்டு விழித்தவல்போல் உணர்வடைந்தாள். அவளுக்குண்டான ஆச்சரியம் அளவற்றதாயிருந்தது. அதனால் அவள், "இவன் மானிட புத்திரனல்லன்; அந்த வைகுண்ட வாசனே இக்குழந்தையாக அவதரித்திருக்கின்றான்" என்று பேரானந்தக் கடலில் மூழ்கிக் கிருஷ்ணனை வாரியெடுத்து மடிமீது வைத்து முத்தியிட்டு அன்புடன் கொண்டாடினாள்.

## 16. மருத மரங்களின் பங்கம்

பின்னர் ஒருநாள், யசோதை, கிருஷ்ணனைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு தயிர் கடைந்தாள். அப்போது கிருஷ்ணன் முகத்தில் தயிர்த்துளிகள் தெறித்து நிறைந்து பேரழகைச் செய்தன. அவ்வாறு தயிர்த்துளிகள் நிறைந்த முகத்தையுடைய கிருஷ்ணன் தன் தாய், தயிர் கடைந்து இளைப்புறுவதைத் தடுப்பவன்போல, தயிர் கடையும் மத்தினைக் கெட்டி

யாகப் பிடித்துக் கொண்டான். அது கண்டு யசோதை பேரானந்த முற்று, "என் சிரமந் தீர்க்கவந்த செல்வனே!" என்று அவனை அன்புடன் தூக்கி மடியில் வைத்து அவனுக்குப் பாலூட்டினாள். அப்போது அடுப்பில் காயவைத்திருந்த பாலமுது பொங்கிற்று. உடனே யசோதை, கிருஷ்ணனைக் கீழே யிறக்கிவிட்டுப் பாலை இறக்குதற்கு அடுப்பினிடம் சென்றாள்

அவள் அங்கே போய் வருவதற்குள் பால கிருஷ்ணன் தயிர் கடையும் மத்தை யெடுத்தெறிந்து, தயிரை யெல்லாம் அள்ளியுண்டுவிட்டு, தயிர்ப் பாண்டத்தை யுடைத்து, அறை வீட்டிற்குள் புகுந்து வெண்ணெய்ச் சட்டி வைக்கப்பட்டிருந்த உறியைக் கண்டு, அது தனக் கெட்டாதபடியால் உரலை உருட்டிக் கொண்டுவந்து அதனடியில் நிறுத்தி, அதன் மீதேறி நின்று வெண்ணெயை அள்ளி உண்டு கொண்டிருந்தான்.

அடுப்படிக்குச் சென்ற யசோதை பாலை யிறக்கி வைத்துவிட்டுத் திரும்பி வந்தாள்; தயிர்ப்பாண்டம் உடைந்து கிடப்பதைக் கண்டாள்; அது கிருஷ்ணனால் நடந்த வேலை யென்பதைத் தெரிந்து கொண்டாள். உடனே அவனைத் தேடினாள்; அந்த அறை வீட்டிற் புகுந்து வெண்ணெயுண்டவாயனைப் பார்த்துவிட்டாள்; கோபத்துடன் அவனைப் பிடித்துத் தண்டிக்க வேண்டுமென்று மெதுவாகப் பதுங்கி அவனருகிற் சென்றாள்; கிருஷ்ணன் ஓட்டமெடுத்தான்; யசோதை ஒரு சிறு கோலைக் கையிலெடுத்துக் கொண்டு அவனைத் துரத்தினாள்; கிருஷ்ணன் நெடுந்தூரம் ஓட்டங் காட்டினான்; யசோதை இளைத்துப் போயினாள்; பின்னர் கிருஷ்ணன், தாய்க்கு வருத்த முண்டுபண்ணக் கூடாதென்று அவள் கையில் அகப்பட்டுக் கொண்டான்.

அதன்மேல் யசோதை அவனைப் பிடித்து வீட்டிற்குள் இழுத்து வந்து, "இனி இவனை அடிப்பதாற் பயனில்லை; கட்டிப் போட்டு விட்டால் இவன் துஷ்டத்தனஞ் செய்யாமலிருப்பான்" என்று அங்கே கிடந்த உரலிற் சேர்த்துக் கட்டி விட்டு மற்றொரு பக்கத்திற் சென்று தன் வேலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அப்போது பூர்வ ஜென்மத்தில் நாரதர் சாபம் பெற்ற குபேரன் புத்திரர்களாகிய நளகூபரன், மணிகிரீவன் என்னும் இருவரும் அந்த நந்தகோபரின் வீட்டின் பின்புறத்தில் இரட்டை மருத விருக்ஷங்களாகத் தோன்றி விருத்தியடைந்து நின்றார்கள். அவர்கள் சாபம் கிருஷ்ணனால் நீங்கக் கூடியதா யிருந்தது. உரலில் கட்டுண்டிருந்த கிருஷ்ணன் அந்த விருக்ஷங்களை நோக்கிக் குபேர புத்திரர்கள் மீது கிருபைகொண்டு உரலை யிழுத்துக்கொண்டே நகர்ந்து நகர்ந்து அந்த மரங்களின் இடையிற் புகுந்து போனான். அப்போது அவனோடு சேர்த்துப் பிணிக்கப்பட்டிருந்த உரல் குறுக்காக அவ்விருக்ஷங்களில் மாட்டிக் கொண்டது. கிருஷ்ணன் பலங் கொண்டு அதனை யிழுத்தான். அவ்வேகத்தால் அவ்விரண்டு மரங்களும் வேரற முறிந்து பேரொலியுடன் வீழ்ந்தன. அவற்றிலிருந்த குபேர புத்திரர் இருவரும் சாபம் நீங்கித் தங்கள் உருவம் பெற்றுக் கிருஷ்ணனை வணங்கித் துதித்து விட்டு மறைந்தார்கள்.

மரங்கள் முறிந்து வீழ்ந்ததனால் உண்டான ஓசை நெடுந் தூரம் கேட்டது; நந்தகோபர், யசோதை, மற்ற ஆயர்கள் எல்லோரும் அங்கே ஓடிவந்தார்கள். மரங்கள் வீழ்ந்து கிடப்பதையும், குழந்தை பிணிக்கப்பட்ட உரலுடன் பக்கத்திலிருப்பதையும் பார்த்து, முதலில் குழந்தைக்கு இம்மரங்களின்

வீழ்ச்சியால் என்ன நேர்ந்ததோ வென்றஞ்சினர்கள். பின்னர் அவன் அபாயமின்றி யிருப்பதைப் பார்த்து அதிசயித்தார்கள். உடனே நந்தகோபர் குழந்தையின் கட்டை விட்டு அவனைத் தூக்கி உபசரித்து யசோதையிடம் கொடுத்தார். அங்கு விளையாடிக் கொண்டிருந்த ஆயச் சிறுவர்கள், நடந்தவற்றை அவர்களிடம் கூறினர்கள். அவர்கள் சிறுவர்களானதால், நந்தகோபர் முதலியவர்கள் அவர்கள் பேச்சில் முழு நம்பிக்கை கொள்ளாமல் கிருஷ்ணனுடன் வீட்டிற்குப் போனர்கள். இங்கு கிருஷ்ணனுடைய வயிற்றின் பாகம் தாம்பினால் கட்டப்பட்ட காரணத்தினல் அவனுக்குத் தாமோதரன் என்னும் நாமமுண்டாயிற்று.

## 17. நாவற் பழக்காரிக்கு நல்லருள் செய்தது

அதன்மேல் கிருஷ்ணன், சிறுவர்களோடு கூடித் தெருக்களிற் சென்று இனிய கீதங்களைப் பாடியும், ஆடியும், வேறு பல விளையாட்டுக்களைச் செய்தும் அவரை மகிழ்வித்து வந்தான். அப்போது ஒருநாள் தெருவில் அவன் விளையாடும் போது ஒரு மூதாட்டி கூடையில் நாவற்பழம் வைத்து விற்றுக்கொண்டு வந்தாள். கிருஷ்ணன் அவளைக் கண்டதும் வீட்டிற்குட் புகுந்து இரண்டு கைகள் நிறையத் தானியத்தை அள்ளிக்கொண்டு நாவற்பழம் வாங்கும் பொருட்டு அவளிடம் விரைந்தோடி வந்தான். ஓடிவந்த வேகத்தால் கைகளிலிருந்த தானிய முழுதும் சிந்திப்போயிற்று. அவ்வாறு கரங்களில் ஒன்றுமில்லாமற் போயும் கிருஷ்ணன் குவித்த வெறுங் கைகளைக் கிழவியிடம் நீட்டி, "கிழவி! நான் கைகள் நிறையத் தானியங் கொண்டு வந்தேன்; இதை நீ வாங்கிக் கொண்டு எனக்கு நாவற்பழங் கொடு" என்றான். கிழவி அச்

செய்கையைக் கண்டு கிருஷ்ணன் கையிலொன்று மில்லாதிருந்தும் அவன் மீது அளவிலா அன்புகொண்டு அவள் கைநிறைய நாவற் பழங்களைக் கொடுத்தாள். உடனே அவளுடைய கூடை முழுவதிலும் தானியம் நிறைந்துவிட்டது. கிழவி அதைக்கண்டு வியப்பும், களிப்பு மடைந்தாள். பின்னர் கிருஷ்ணன் நாவற்பழங்களைத் தன் துணைவர்க்குக் கொடுத்துத் தானும் தின்று மகிழ்ந்தான். யசோதை முதலியவர்களும் இவ்வதிசயத்தைக் கேட்டு, "இவன் தெய்வீகக் குழந்தை" என்று கிருஷ்ணனைக் கொண்டாடினார்கள்.

பின்னர் கிருஷ்ணனும், பலராமனும் முன்னிருந்ததைக் காட்டினும் சற்று பெரிய பிள்ளைகளாய் விட்டதால் யமுனைக் கரை முதலிய இடங்களுக்குச் சென்று விளையாடி வந்தார்கள். அக்காலத்தில் ஒருநாள் அவர்கள் யமுனையாற்றங்கரைக்குப் போய் உணவுண்ணுதலையும் மறந்து அங்கே நெடுநேரம் வரையில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஸ்நானஞ் செய்தற் பொருட்டு யமுனைக்குச் சென்ற உரோகிணி அவர்களைக் கண்டு வீட்டிற் கழைத்தாள். அவர்கள் அவளுடைய வார்த்தையை இலட்சியம் செய்யாமல் விளையாட்டிலேயே புத்தியைச் செலுத்திக் கொண்டிருந்தார்கள். உரோகிணி யசோதையிடம் வந்து அவர்கள் செய்தியைக் கூறினாள். உடனே யசோதை அங்கே போய் அவர்களைக் கண்டு, "என் அருமைச் செல்வர்களே! இப்படி நீங்கள் உடம்பெல்லாம் மண்ணாகச் சாப்பாட்டையும் மறந்து விளையாடலாமா? உங்களுடைய தந்தை இதைக் கண்டால் உங்களை அடிப்பார்; இன்று புண்ணிய தினமாதலால் நீங்கள் மங்களஸ்நானஞ்செய்யவேண்டும்; வாருங்கள்" என்று அவர்களை அழைத்து வந்தாள். அதன்மேல் அவளும் உரோ

கிணியும் அவர்களுக்கு மங்கள ஸ்நானஞ் செய்வித்து, ஆபரணங்களைப் பூட்டி உணவூட்டி மகிழ்ந்தார்கள்.

இவ்வாறே அக்குழந்தைகள் தினந்தோறும் விளையாடப் போய்விடுவதும், யசோதையும், உரோகிணியும் அவர்களை அழைத்துவந்து பாதுகாப்பில் வைப்பதும் வழக்கமாக நடந்து வந்தன.

## 18. ஆயர் பிருந்தாவனம் அடைதல்

அதன்மேல் கிருஷ்ணனுக்குப் பிருந்தாவனம் போக இச்சை யுண்டாயிற்று. அதனால் அவன், ஒரு முதிய ஆயன் மீது ஆவேசித்து நந்தகோபர் முதலிய ஆயர்களைநோக்கி, "இங்கே அசுரரால் பலதீங்குகள் நேர்ந்துகொண்டிருக்கின்றன; ஆதலின் நீங்கள் பிருந்தாவனம் சேர்ந்தால் சௌக்கியமா யிருப்பீர்கள்" என்று கூறினன். அவ்வாறே பிருந்தாவனத்திற்கு எவ்லோரும் புறப்படும்படி நந்தகோபர் ஆயர்களுக்கும் கட்டளையிட்டார். ஆயர்கள் தங்கள் பொருள்களை யெல்லாம் வண்டியி லேற்றிக்கொண்டும், பசுக்களை ஓட்டிக்கொண்டும், குழந்தைகளைத் தூக்கிக் கொண்டும் புறப்பட்டார்கள். நந்தகோபர், யசோதை, உரோகிணி, கிருஷ்ணன், பலராமர் முதலியவர்களும் இரதத்திலேறிப் பிரயாணமானார்கள்; ஆயர்களிற் சிலர் பிள்ளாங்குழல், சங்கு முதலிய வாத்தியங்களை ஊதினார்தள்; சிலர்பாடினர்; கோபிகைகள் மங்களம்பாடிச் சென்றனர்.

இப்படி எல்லோரும் புறப்பட்டுப்போய் பிருந்தாவனம் சேர்ந்தனர். இவர்கள் அங்குச் சேர்ந்ததனால் அவ்வனம் மிகுந்த செழிப்புற்று மனோகரமாய்க் காணப்பட்டது. மாடுகளும் கன்றுகளும் கொழுத்துப் பெருத்துக் குதூகலமாயிருந்தன; கோடைகாலத்திலும் மாரிகாலத்திலுண்டாவது போலவே

இளம்புற்கள் செழிக்கப் பெற்றிருந்தன. அந்தப் பிருந்தா வனத்தில் ஆயர்கள் தங்கள் தங்களுக்குத் தக்கவாறு வாசஸ்தானங்களை அமைத்து அவற்றில் வசித்து வரலானார்கள். சிறிது காலஞ்சென்ற வளவில், இராமகிருஷ்ணர்களிருவரும் கன்றுமேய்க்கும் பருவமுடையவராய், ஒருவரோ டொருவர் இணைபிரியாமல் விளையாடிக்கொண்டும், புள்ளாங்குழல்களினாலும், இலைகளினாலும் வாத்திய கோஷம் விளைத்துக்கொண்டும், கைகொட்டிச் சிரித்துக்கொண்டும், ஓடிக்கொண்டும், ஒருவரை யொருவர் சுமந்துகொண்டும், மற்றுமுள்ள பிள்ளைகளோடு அவ்விதமே ஆடிக்கொண்டும் கன்றுகளை மேய்த்து வந்தார்கள்.

## 19. வச்சாசுரன் வதை

அங்ஙனம் பலராமனும், கிருஷ்ணனும் இடைச் சிறுவர்களுடன் கன்றுகளை மேய்த்து வருங்காலத்தில், முன்னே கோகுலத்திற்குச் சென்ற அசுரர்கள் மாண்ட செய்தியைக் கம்சன் கேள்விப்பட்டு மனம் வருந்திக்கொண்டிருந்தான்; அப்படி யிருக்கும்போது, ஆயர்கள் கிருஷ்ணனுடன் பிருந்தாவனம் சென்ற செய்தியும் அவனுக்கு எட்டிற்று. அதனால் அவன் கோபங்கொண்டு, கிருஷ்ணனைக் கொன்று வருமாறு வேறு சில அசுரர்களை அங்கே ஏவினான். அவர்களில் வச்சன் என்னும் அசுரன், ஒருநாள் கன்றுருவங்கொண்டு கிருஷ்ணன், பலராமன் ஆகியவர்களால் மேய்க்கப்பட்ட கன்றுகளின்கூட்டத்திற் புகுந்து கிருஷ்ணனைக் கொல்லுதற்குச் சமயம் பார்த்திருந்தான்; மற்றொரு அசுரன், அக்கன்றுகளுக்குப் பக்கத்தில் நின்ற ஒரு விளாமரத்தில் கனியுருவங் கொண்டிருந்தான். கிருஷ்ணன் இவர்கள் சூதினையறிந்து, கன்றுவடிவமாய் நின்ற

அசுரனுடைய பின்னங்கால்களைப் பிடித்து அவனைத் தூக்கிச் சுழற்றி விளங்கனி யுருவமாயிருந்தவன் மீது எறிந்தான். இருவரும் மோதுண்டிறந்தார்கள்.

## 20. பகாசுரன் வதை

பின் ஒருநாள் கிருஷ்ணன் தோழரோடு கன்றுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்போது ஒரு மடுவில் ஜலம் பருகச் சென்றான். அங்கே கம்சனால் அனுப்பப்பட்ட அசுரர்களில் ஒருவனாகிய பகன் என்பவன் கொக்குருவங் கொண்டிருந்து கிருஷ்ணனைக் கொல்ல முயன்றான். அவனுடைய செய்கையைக் கண்ட கிருஷ்ணன் கொக்குவடிவமான அவன் வாயைக் கிழித்து, அவனைக் கொன்றான்.

## 21. அகாசுரன் கதை

அதன்மேல் ஒருநாள், ஆயச் சிறுவர்கள், கிருஷ்ணனுடன், கட்டுச்சாதம் கட்டி யெடுத்துக் கொண்டும், கன்றுகளை ஓட்டிக்கொண்டும் போய் ஒரு வனத்தில் அக்கன்றுகளை மேயவிட்டு உணவுண்டு களித்து விளையாடி விட்டுக் கன்றுகளுடன் திரும்பி வந்தார்கள். அப்போது கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஒருவனாகிய அகன் என்பவன் பெரிய மலைப் பாம்புருவங் கொண்டு தன்னுடைய பெரிய வாயைத் திறந்தபடியே கிருஷ்ணனைக் கொல்லும் நோக்கத்துடன் வழியிற் கிடந்தான். இடைச் சிறுவர்கள், அவனுடைய வாயை மலைக் குகை யென்று நினைத்து அதற்குள் நுழைந்தார்கள். கிருஷ்ணனும் புகுந்தான். அசுரன் எல்லோரையும் விழுங்க ஆரம்பித்தான். அப்போது கண்ணன் அவனுடைய துர்ச் செய்கையை யுணர்ந்து அவன் தொண்டையை அடைத்து

விட்டான். அதனால் அந்த அசுரன் மூச்சுவிட முடியாமல் வயிறு பொருமி வெடிக்க, வாய்பிளந்து இறந்தான்.

## 22. நான்முகன் மறைத்த கன்றுகளையும் இடைச் சிறுவர்களையும் கண்ணன் ஆயர்களுக்குக் காட்டிக் கொண்டிருந்தது

பின்னர் கிருஷ்ணன், யமுனைக் கரையிலுள்ள மணல் மேட்டினருகில் கன்றுகளை விட்டு இடைச் சிறுவர்களுடன் தயிர்ச்சாதமுண்டு களித்து விளையாடிக்கொண்டிருந்தபோது பிரமதேவன், கண்ணனுடைய மகிமைத் திருவிளையாடல்களைக் காண விரும்பிக் கன்றுகளையும், ஆயச் சிறுவர்களையும் தன்னுடைய மாயையால் மறைத்து விட்டான். கிருஷ்ணன், அச்செய்கை நான்முகனால் செய்யப்பட்டதென்று தெரிந்து கொண்டு, "கன்றுகளைக் காணாவிடில் பசுக்கள் வருந்தும்; சிறுவர்களைக் காணாவிடில்ஆயர்கள்வருந்துவார்கள் ; ஆதலின், அவைகளும், அவர்களும் அங்ஙனம் வருந்தாதிருக்குமுபாயத்தை நாம் செய்ய வேண்டும்" என்று தானே அந்தக்கன்றுகளாகவும், இடைச் சிறுவர்களாகவும் வடிவெடுத்துத் தினந்தோறும் மாலையில் ஆயர்வீடுகள் தோறும் சென்றும், காலையில் காட்டிற்குச் சென்றும், ஆயர்களுக்கும் பசுக்களுக்கும் கலக்கம் நேராதிருக்கும்படி செய்து வந்தான். இப்படியே ஒரு வருஷங் கழிந்தது. அதன்மேல், ஒருநாள் வனத்தில் கிருஷ்ணன், நான்முகனால் மறைக்கப்பட்ட கன்றுகளுடனும், சிறுவர்களுடனும் இருப்பதை அவன் கண்டு அதிசயித்து, அக்கன்றுகளையும் சிறுவர்களையும் நன்றாக உற்று நோக்கினான். எல்லா வடிவங்களும் கிருஷ்ணனுடைய வடிவங்களாகவேயிருந்தன. இந்த அதிசயத்தைக் கண்டதும்பிரமன், கிருஷ்ணனுடைய மகிமையை உணர்ந்து உடனே, தான் மறைத்து

3088



வைத்த கன்றுகளையும், சிறுவர்களையும் கிருஷ்ணனிடம் சேர்த்து, இவனை வணங்கித் துதித்துச் சென்றனன். பின்னர் கிருஷ்ணன், கன்றுகளுடன் ஆயச்சிறுவர்களை அவரவர்களுடைய வீடுகளிற் சேர்த்தான்.

## 23. தேனுகாசுர வதம்

அதன்மேல் ஸ்ரீராம கிருஷ்ணர்கள் வழக்கப்படி ஒருநாள் கன்றுகளை யோட்டிக்கொண்டு ஒரு பனங்காட்டிற் புகுந்தார்கள். அந்த வனத்தில் தேனுகன் என்னும் அசுரன் கழுதையின் வடிவமெடுத்து மிருகங்களை ஆகாரமாகப் புசித்துக்கொண்டு வசித்து வந்தான். மனிதர் அக்கானகத்தில் பிரவேசிக்கப் பயமுற்றிருந்தனர். அங்கே பனம்பழம் விசேஷித்திருந்தமையால் ஆங்கடைந்த ஆயர்சிறுவர்கள், ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களை, அப்பழங்களைப் பறித்தளிக்குமாறு வேண்டினார்கள். பலராமன் பனைமரங்களை ஆட்டிக் கனிகளை உதிர்த்தான். அச்சமயம் தேனுகன் கழுதை வடிவத்தோடு அவர்களைக் கொல்ல வந்தான். பலராமன் அவனைத் தூக்கிப் பனைமரங்களில் மோதிக் கொன்றான். பின், அவ்வசுரனைச் சேர்ந்த பலர் அவர்களுடன் யுத்தத்திற்கு வந்தார்கள். கோபாலனும், பலராமனும் அவ்வசுரர்களையும் கைகளாற் பற்றி மரங்களின்மீது வீசி யெறிந்து, அத்துஷ்டருடைய ஆவிகளையும் போக்கியருளினர். இடைப்பிள்ளைகள் பனம்பழங்களைக் களிப்புடன் புசித்து அம்மகா புருஷரைத் துதி செய்தார்கள். கன்றுகளும் நல்ல புற்களை மேய்ந்து களித்தன.

## 24. காளிய மர்த்தனம்

பிருந்தாவனத்திற்குச் சமீபத்தில் யமுனை நதியைச் சார்ந்த காளிந்தி யென்னும் ஒரு மடுவிருந்தது. அதில் காளியன் என்னும் ஐந்தலை நாகமொன்று வசித்து வந்தது. அது

மிகுந்த விஷமுள்ளது; அதன் விஷத்தினல் அந்த மடுவின் ஜலம் மிகக் கொதிப்படைந்திருந்தது; பார்க்கப் பயங்கரமாக வுந் தோன்றியது. மேலும் அந்த விஷாக்கினியின் காற்ருல் கரையிலுள்ள மரங்களெல்லாம் பட்டுப்போயின; புற்களெல் லாம் கருகிப்போயின; பறவைக் கூட்டங்களும் எரிந்து வீழ்ந்திருந்தன. ஒரு நாள் பலராமனை விட்டுக் கிருஷ்ணன் மாத்திரம், ஆயச் சிறுவர்களுடன் பசுக்களை ஓட்டிக்கொண்டு காட்டிற்குப் போனன். அப்போது மத்தியான நேரத்தில் இடைச் சிறுவர்களுக்கும், பசுக்களுக்கும் தாகம் மிகுந்தது. அதனல் எல்லோரும் ஜலம்தேடி எங்குமலைந்து ஜலம் அகப் படாமல் முடிவில் அக்காளிந்தி மடுவினருகில் வந்தார்கள். அதிலிருந்த விஷஜலத்தைக் கண்டவுடன் ஆயச் சிறுவர்கள் அதனைப் பருகி மயங்கி வீழ்ந்தார்கள். பசுக்களும் அவ் வாறே அதைக் குடித்து மூர்ச்சித்தன. உடனே கிருஷ்ணன் அச்சிறுவர்களையும், பசுக்களையும் பிழைப்பித்தார். கோபாலச் சிறுவர்கள் கிருஷ்ணனைத் துதித்தார்கள். அதன்மேல் கிருஷ்ணன் அதிற் குடிகொண்டிருக்கும் நாகேந்திரனை அப் புறப்படுத்தி அந்த மடுவின் ஜலத்தைப் பரிசுத்தமாக்கி எல் லோருக்கும் உபயோகமாகும்படி செய்ய வேண்டுமென்று நினைத்தான். அப்போது ஒரு கடப்பமரம் மாத்திரம் பக வான் கிருபையால் அங்கே பட்டுப் போகாமல் நின்றது. உடனே கிருஷ்ணன் அதிலேறி நின்று அந்த மடுவில் குதித் தான். சர்ப்ப ராஜன் அவனைச் சுற்றிக்கொண்டான். கரையி லிருந்து இந்த விபரீதத்தைப் பார்த்த சிறுவர், "ஓஹோ மோசம் வந்துவிட்டது; பாம்பினல் கண்ணன் மடிந்துபோ வான்; இதற்கென்ன செய்யலாம்" என்று துக்கிக்கலானர்கள். அத்தருணத்தில் ஆயர்கள் தங்கியிருந்த இடத்தில் சில துர்

நிமித்தங்கள் உண்டாயின; பூமி அதிர்ந்தது; எரிகொள்ளி ஆகாயத்திலிருந்து வீழ்ந்தது; காய்ச்சின பால் முரிந்தது; வெண்ணெய்த் தாழிகள் உறியினின்றும் உடைந்து வீழ்ந்தன. இவற்றைக் கண்டதும் நந்தகோபர் முதலியவர்கள் 'கிருஷ்ணனுக்கு ஏதோ அபாயம் நேர்ந்தது,' என்று அவனைத் தேடி அங்கே ஓடிவந்தார்கள். அப்போது கிருஷ்ணன் காளிங்கனால் பிணிப்புண்டிருந்தான். அதைக்கண்டு எல்லோரும் மயங்கி வீழ்ந்தார்கள். அதன்மேல் கிருஷ்ணன், அக்காளியனை அடித்துமிதித்து அவன் வலிமையைக் குறைத்துப் பிணிப்பினின்றும் விடுபட்டு அவனுடைய வாலைப் பற்றிக் கொண்டு முடிமீதேறி நின்று நர்த்தனஞ் செய்தான். மயங்கி வீழ்ந்த நந்தகோபர் முதலியவர்கள் மயக்கம் நீங்கியெழுந்து கிருஷ்ணன் அவ்வாறு காளியன் முடிவில் நடனமிடுவதைக் கண்டு முதலிற் பயந்தார்கள்; பின் கோபாலனுக்கு ஏதேனும் கெடுதி சம்பவித்தால், நாமும் இம்மடுவில் வீழ்ந்து உயிர் விடுவதே சரியென்று உறுதிசெய்து கொண்டார்கள். அப்போது கிருஷ்ணனால் அந்த நாகராஜன் வலிமை ஒடுங்கிப் பிராணன் போகும் நிலையிலிருந்தான். அதைக்கண்டு, காளிங்கனுடைய மனைவியராகிய நாககன்னியர் அவனைக் கொல்லாமல் விடுத்துத் தங்களுக்கு மங்கலியப் பிச்சை தரவேண்டுமென்று கண்ணனைப்பிரார்த்தித்து இறைஞ்சினார்கள். காளியனும் தன்னை விட்டுவிடும்படி கிருஷ்ணனிடம் இரந்து, "பகவானே! உன்னை நான் மதியாத காரணத்தால் இறுமாந்திருந்து இப்போது இந்தக் கதிக்கு ஆளானேன்; இப்போது உன்னை இன்னானென்றுணர்ந்தேன்; நான் பெற்ற தண்டனை போதும்; என்னை இரட்சித்தருளவேண்டும்" என்று மன்றாடினான்.

அதன்மேல் கிருஷ்ணன், "நீஇந்த மடுவைவிட்டுச்சமுத்திரம் போய்ச் சேரவேண்டும்" என்று அவனுக்குக் கட்டளையிட்டனன். அவ்வாறே காளியன், தன் புத்திரமித்திர களத்திராதியரோடு யாவரும் பார்த்துக்கொண்டிருக்கும் போதே அந்த மடுவைவிட்டுச் சாகரத்தை நோக்கிப் போயினன். இவற்றையெல்லாம் பார்த்த யாவரும் கண்ணனைக் கொண்டாடி அவனுக்குப் பல்லாண்டு பாடினார்கள்.

## 25. பிரலம்பாசுர வதை.

காளிங்கன் அவ்விடத்தை விட்டு நீங்கிய பின்பு சூரியன் அஸ்தமித்த படியால் நந்தகோபர் முதலிய கோபாலர்களும், பலராமன், கிருஷ்ணன் முதலானவர்களும் அங்கேயே தங்கினார்கள். அன்றிரவு எல்லோரும் தூங்கும்போது நடுசாமத்தில் காட்டுத் தீ பரவி அவர்களைச் சூழ்ந்துகொண்டது. அது கண்டுகோபாலர்கள் கலங்கினார்கள். உடனே கிருஷ்ணன் அக்காட்டுத் தீயை அடக்கி, அவர்களைக் காப்பாற்றினான். மறுதினம் யாவரும் பாடிக்குச் சென்று மகிழ்ந்திருந்தார்கள்.

அதன்மேல் வசந்தகாலம் வந்தது. அக்காலத்தில் பிருந்தாவனமெங்கும் மரங்கள் இலையுதிர்ந்து தளிர்த்தன; பற்பல விதமான புஷ்பங்கள் மலர்ந்து நறுமணம் வீசிக்கொண்டிருந்தன; பறவைகள் கூட்டங்கூட்டமாகச் சேர்ந்து பாடிக்கொண்டிருந்தன; தென்றல் வீசிற்று. இவ்வாறு வனம் செழித்திருக்கும்போது கிருஷ்ணனும், பலராமனும் ஆயச்சிறுவர்களுடன் பசுக்களையும், கன்றுகளையும் ஓட்டிக்கொண்டுபோய் அவ்வனத்தின் ஒரு பக்கத்தில் மேயவிட்டு ஆனந்தத்துடன் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது, கிருஷ்ணன் முதலியவர்களைக் கொல்லும்படி கம்சனால் ஏவப்பட்ட பிரலம்பன் என்னும் அசுரன் ஒரு இடைச் சிறுவன்போல வடிவவெடுத்து, அவர்களுடன் கூடி விளையாடிக் கொண்டிருந்து, அவ்விளையாட்டின் மூலமாகவே பலராமனை வஞ்சனையாகத் தோளில் தூக்கிக்கொண்டு சென்றான். பலராமன், அவனுடைய சூதை யுணர்ந்து, அவன் தலை சிதறும்படி அவனை யறைந்து கொன்றான்; அதனை யுணர்ந்த ஆயச் சிறுவர் மகிழ்ந்தார்கள். பின் எல்லோரும் பாடிக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

அதன்மேல் கோடைக்காலத்தில் அவர்கள் பசுக்களை ஓட்டிக்கொண்டு முஞ்சாரணியத்திற்குச் சென்றிருந்தார்கள். அப்போதும் அவர்களைக் காட்டுத் தீ வளைந்துகொண்டது. அத்தருணத்திலும் கிருஷ்ணன் அதனை அடக்கி அவர்களை இரட்சித்தான்.

பின்னர்க் கார்காலத்தில் கிருஷ்ணன், துணைவர்களோடும், பசுவினங்களோடும் வனத்திற் சஞ்சரித்து வேணுகானத்தினால் பசுக்களை மகிழ்வித்தும், யமுனை தீரத்தில் கோபியர் மனமுருக வேணுகானஞ் செய்தும், பற்பல திருவிளையாடல்களைப் புரிந்தும், யாகசாலையில் கோபாலச் சிறுவர்களுக்கு அன்னங் கொடுக்கக் கூடாதென்று பிராமணர் மறுத்தும், அவர்களுடைய பத்தினிகளை அன்னமிடச் செய்தும், ஆயர்களை மகிழ்வித்திருந்தான்.

## 26. கோவர்த்தன பூஜையும், கோவிந்த பட்டா

இப்படி யிருக்குங்காலத்தில், நந்தகோபர் முதலியவர் வருடந்தோறும் செய்யும் இந்திர பூஜைக்குரிய நாள்

சமீபித்தது. அதனை நடத்த வேண்டுமென்று நந்தகோபர் கிருஷ்ணனிடம் தெரிவித்தார்.

அதைக் கேட்டுக் கிருஷ்ணன் நந்தகோபரையும், மற்ற ஆயர்களையும் நோக்கி, "பெரியோர்களே! நீங்கள் கொண்டாட உத்தேசிக்கும் அந்த இந்திரோற்சவத்தின் பயன்யாது?" என்று கேட்டான். அவர்கள் அன்புடன் கிருஷ்ணனை நோக்கி, "குழந்தாய்! தேவேந்திரன் மேகங்களுக்கும், ஜலத்திற்கும் அதிபதி; அவன் கட்டளையால் மேகங்கள் மழையை வருஷிக்கின்றன; அந்த மழையானது, பயிர் முதலிய உணவுப் பொருள்களுக்கு ஆதாரம்; உணவுப் பொருள்களால் நாம் சுகமடைகிறோம்; நம்மால் வளர்க்கப்படும் மாடுகளும் சுகமடைகின்றன; ஆகையால் நாம் இந்திரோற்சவத்தை நடத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்" என்றார்கள்.

கண்ணன் அவர்களை நோக்கி, "நான் சொல்லுவதைக் கேளுங்கள்: நாமோ பயிரிடுவோருமல்லர்; வாணிபஞ்செய்யும் வர்த்தகருமல்லர்; காட்டில் திரிந்து மாடுகளை மேய்த்துப் பிழைப்பவராயிருக்கிறோம்; எவன் எதனால் ஜீவிக்கின்றானோ அவனுக்கது சிறந்த பொருள்; அதை அவன் விருத்தி செய்ய வேண்டும்; அதன் மூலமாகவே கடவுள் அவனைக் காப்பாற்றி வருகிறார்; நம்முடைய ஜீவனத்திற்குப் பசுக்கள் அனுகூலஞ் செய்கின்றன; அவற்றை நாம் விருத்தி செய்யவேண்டும்; அவ்விருத்திக்கேதுவான காரியங்களையே செய்யவேண்டும்; பசுக்கள் புற்களை மேய்ந்து விருத்தியாவதற்கு மலைகளே தக்கவைகளாயிருக்கின்றன; அவற்றையே நாம் வழிபட வேண்டும்; இப்போது நம் பசுக்கள் ஜீவிப்பதற்குக் கோவர்த்தன கிரியே அனுகூலமானதாயிருப்பதால் நாம் அந்தக் கோவர்த்தன கிரிக்கு ஆராதனை செய்வதே நலம்; இந்திரனால் நமக்கு ஆகவேண்டிய தொன்றுமில்லை" என்று சொன்னான்.

கிருஷ்ணன் மொழியைக் கேட்ட ஆயர்கள் அவ்வாறே கோவர்த்தன கிரிக்குப் பூஜை செய்தனர். இதை இந்திரன் அறிந்து கோபங்கொண்டு ஏழு மேகங்களையும் வரவழைத்து "நீங்கள் உடனே ஆயர்பாடி முழுவதும் நசித்துப்போக மழையை வருஷியுங்கள்" என்று அவற்றிற்குக் கட்டளையிட்டான். அம்மேகங்கள் அந்த உத்தரவின்படி வருஷிக்க ஆரம்பித்தன. ஆயர்கள், மழையின் உபத்திரவத்தைச் சகிக்கமுடியாமல் மாட்டு மந்தைகளுடன் அல்லோல கல்லோலப்பட்டுக் கிருஷ்ணனை நோக்கி, "அப்பா! உன்பேச்சைக்கேட்டு நாங்கள் இந்த நிலைமையை யடைந்தோம்" என்று வருந்தினார்கள். கோபாலன் நகைத்துக்கொண்டே, "நீங்கள் பயப்படவேண்டாம்; இந்த மலையின்கீழ் உங்கள் மாட்டு மந்தைகளுடன் சுகமாயிருங்கள்" என்றுசொல்லி, அந்த மலையைத் தன் சுண்டு விரலால் தூக்கி, ஆயர்களுக்கும் பசுக்களுக்கும் மேலே குடைபோலப் பிடித்தான். ஏழு தினங்கள்வரை மழை விடாமற் பெய்தது; பெய்தும் ஆயர்கள் பசுக்களுடன் துன்பமின்றி யிருந்தார்கள்.

தேவேந்திரன் இந்த அதிசயத்தைக் கண்டு நாணமடைந்து, கிருஷ்ண மூர்த்தியின் திருவடிகளில் வந்து வீழ்ந்து, "சுவாமி! அடியேன் மமதையால் உமது மகிமையை உணராமல் இக்காரியத்தைச் செய்தேன்; இப்போது தேவரீர் இன்னவர் என்பதை உணர்ந்து ஓடிவந்தேன்; அடியேனது பிழையை மன்னித்து என்னைக் காத்தருள வேண்டும்" என்று அவனை வேண்டினான்.

அதன்மேல் கண்ணன், இந்திரனுடைய பிழையைப் பொறுத்து, அவனை நோக்கி "தேவர்கோனே! நீ தவத்தால் தப்பட்டத்தைப் பெற்றாய்; உன் தகுதிக்குத் தக்கபடி

எவருக்கும் நலமே புரியவேண்டும்; இனிமேல் இனியவனாக நட" என்று பல நீதிகள் எடுத்துக் கூறினான். பின்னர் இந்திரன் கண்ணன் கருணையை வியந்து அவனுக்கு "கோவிந்தன்" என்னும் நாமஞ்சூட்டி அபிஷேகஞ்செய்து, அவனடியை வணங்கிச் சென்றான். (கோவிந்தன்-என்பதற்கு, 'பசுக்களுக்கு இந்திரன், என்பது பொருள்.)

## 27. சங்கசூட வதம்

இந்திரன் சென்றபின், கிருஷ்ணனோடு ஆயர்கள் எல்லோரும் பாடியிற் சேர்ந்து மகிழ்ந்தார்கள். அப்படி யிருக்கும் போது ஒருநாள் நந்தகோபர், ஏகாதசி விரதமிருந்து மறுநாள் துவாதசியன்று, யமுனைக்குப் போய்த்தீர்த்தமாடிக்கொண்டிருந்தார். அவரை, வருணப்பிரத்தியன் என்னும் ஓர் அசுரன், தனது மாயையால்மயக்கி எடுத்துக்கொண்டுபோய் வருணலோகத்தில் மறைத்து வைத்தான்; அவரைக் காணமல் ஆயர்கள் வருந்தினார்கள். உடனே கிருஷ்ணன் வருணலோகத்திற்குச் சென்று அந்த நந்தகோபரை மீட்டுக்கொண்டு வந்தான். அது கண்டு ஆயர்கள் ஆனந்த மெய்தினார்கள்.

பின்னர்க் கிருஷ்ணன் வேணுகானத்தினால் கோபிகாஸ்திரீகளுக்குத் தம்மிடத்து மிக்க பக்தி யுண்டாகுமாறு செய்து பற்பல அற்புதங்காட்டி இன்புற்றிருந்தனன்.

அதன்மேல் ஒருநாள் நந்தகோபர், மற்ற கோபாலர்களுடன் அம்பிகாவனத்தில் நடந்த உற்சவத்திற்குச் சென்றிருந்தார். அங்கே முனிவர் சாபத்தால் மலைப்பாம்பாகியிருந்த வித்தியாதரன் அவர்களை விழுங்கினான். அப்போது கிருஷ்ணன் எல்லோரையும், அப்பாம்பாகிய வித்தியாதரன்

வாயினின்றும் விடுவித்து, அவ்வித்தியாதரனுடைய சாபத்தையும் போக்கினன்.

பின்னொரு சமயத்தில், கிருஷ்ணனும், பலராமரும் பூரண சந்திரிகை பிரகாசிக்க ஒரு நாளிரவில் கோபிகைகளுடன் உத்தியான வனத்திலிருந்து வேணுகானஞ் செய்து விளையாடினர். அப்போது குபேரன் தோழனாகிய சங்கசூடனென்பவன் அந்தக் கோபிகைகளைக் கவர்ந்து சென்றனன். கிருஷ்ணன் பலராமருடன் அவனைத் தொடர்ந்து சென்று கொன்று ஆய்ச்சியரை மீட்டனன். கோபிகைகள் மிகுந்த விசுவாசத்துடன் கிருஷ்ணனைக் கொண்டாடி வந்தார்கள்.

## 28. அரிஷ்டாசுர வதம்

இதன்மேல், கம்சன், கிருஷ்ணன் முதலியவர்களைக் கொண்டு வரும்படி அரிஷ்டன் என்னும் ஓர் அசுரனை ஏவினன். அவன் எருதின் கோலம் பூண்டு ஆயர்பாடியிற் பிரவேசித்து, ஆயர்களையும், மாட்டு மந்தைகளையும் துன்புறுத்தலானன். அத்துன்பத்தால் ஆயர்கள் கிருஷ்ணனிடம் முறையுமிட்டனர். கண்ணன் அந்த அரிஷ்டனை அழுக்கு வஸ்திரத்தைக் கசக்குவது போலக் கசக்கி, அவனுடைய கொம்புகளி லொன்றைப் பிடுங்கி அதனாலேயே அடித்தான். அந்த அடியினால் அவ்வசுரன் உதிரங் கக்கிக் கொண்டு கீழே வீழ்ந்து இறந்தான். ஆயர்கள் கிருஷ்ணனைக் கொண்டாடினார்கள்.

## 29. கம்சன் அக்குரூரரை ஆயர்பாடிக் கனுப்புதல்

பின்னர், மேலே சொல்லப்பட்ட அசுரர்கள் கிருஷ்ணனால் கொல்லப்பட்ட செய்தியையும், கிருஷ்ணன் கோவர்த்தனத்தைக் குடையாக எடுத்து இந்திரனைக் கருவ பங்கம் செய்த விஷயத்தையும் கேள்விப்பட்டுக் கிருஷ்ணனிடம் மிகப்

பகைமை கொண்டிருந்தான். அப்போது நாரதர், கம்சன் கையினின்றும் நழுவிப்போன பெண் குழந்தை யசோதை வயிற்றிற் பிறந்த தென்பதையும், ஆயர்பாடியில் வளர்ந்து வரும் கிருஷ்ணனே தேவகி வயிற்றிற் பிறந்தவனென்பதை யும், பலராமன் உரோகிணியின் பிள்ளை யென்பதையும், கிருஷ்ணனே அந்தக் கம்சனைக் கொல்லப்போகின்ற னென் பதையும் அவனுக்குணர்த்தினர். முன்னமே கிருஷ்ணன் விஷயத்தில் சந்தேகங் கொண்டிருந்த கம்சன் இவற்றைக் கேட்டவுடன் மிக்க சினங்கொண்டு, மீண்டும் வசுதேவரை யும், தேவகியையும் சிறையிலடைத்துவிட்டு, "கிருஷ்ணனைக் கொல்லுமாறு நம்மால் அனுப்பப்பட்ட அசுரர்களெல்லோ ரும் மடிந்தார்கள்; இனி என்ன செய்யலாம்? அந்தக் கிருஷ் ணனையும், பலராமனையும் எப்படிக் கொல்வது? பாலியத்தி லேயே கொன்றொழிய அவர்கள் முதிர்ந்த பிறகு கொல் வது முடியாது; முளையில் எளிதாகக் கிள்ளக்கூடிய செடி யைக் கிள்ளாமல் விட்டுவிட்டால் அது மரமானபின் கோடரி கொண்டல்லவோ அதனை வெட்டவேண்டும்; ஆதலின் இவர் களைக் கொல்ல இப்பொழுதே சூழ்ச்சிகளைச் செய்யவேண் டும்" என்று எண்ணினன்.

அவ்வாறு எண்ணினவன், கிருஷ்ணனையும், பலராமரை யும் கொல்லும்படி கேசியென்னுமசுரனை யனுப்பி, அவர்கள் மதுராநகரத்திற்கு வந்தால் அவர்களைக் கொல்லும்படி சாணூ ரன், முஷ்டிகன் முதலிய மல்லர்களை நியமித்து, குவலயா பீட மென்னும் தனது யானைக்கு மதமேற்றி அவர்கள் மீது ஏவு மாறு பாகனுக்குக் கட்டளையிட்டுப் பின்னர் அவர்களை மது ரைக்கு அழைக்கவேண்டு மென்று தீர்மானித்து, உடனே அக்ருூரர் என்பவரை வரவழைத்து அவரை நோக்கி, "அக்

குரூரரே! நான் ஒரு காரியம் சிந்தித்திருக்கிறேன்; அதை முடிக்கும் வல்லமையுடையவர் நீரே; நீர் தடையொன்றுஞ் சொல்லாமல், தேரின்மீது ஏறிக்கொண்டு இக்கணமே ஆயர் பாடிக்குப் போகவேண்டும்; போய் இங்கே நான் வில்வித்தையைப் பற்றிய விழா நடத்தப் போவதாகவும், அப்போது மல் யுத்தம் முதலியன நடக்குமென்றும், அக்காட்சியைக் கண்டு இராமகிருஷ்ணர்களிருவரும் களிப்படைய நான்விரும்புவதாகவும், அதன்பொருட்டு அவர்களை நான் அழைப்பதாகவும், நந்தகோபரையும் கப்பப்பணத்துடன் நான் வரச் சொன்னதாகவும் அவரிடத்திற் சொல்லி, எப்படியாவது அவர்களை இங்கே அழைத்துவரவேண்டும்" என்று சொன்னான்.

அக்ரூரர் மகா உத்தமர்; தெய்வ விசுவாச முள்ளவர். ஆதலின், "கம்சனிட்ட கட்டளையால் நமக்குத் தெய்வீக புருஷர்களான ஸ்ரீராம கிருஷ்ணர்களைத் தரிசிக்கும் பாக்கியம் கிடைத்ததே" என்று பரமானந்த மடைந்து அங்கே செல்வதற்கு இசைந்தார்.

## 30. கேசி வதம்

அக்ரூரர் அங்கே புறப்பட்டுப் போவதற்குள் கம்சனால் இராமகிருஷ்ணர்களைக் கொல்லுதற்கு அனுப்பப்பட்ட கேசி என்னும் அசுரன், குதிரையின் வடிவங்கொண்டு ஆயர்பாடியிற் புகுந்து அங்கிருப்பவர்களையெல்லாம்பயமுறுத்தித்தொந்தரவு செய்தான். அப்பயத்தினால் ஆயர்கள் கிருஷ்ணனைச் சரணமடைந்தார்கள். அவன் அவர்களை நோக்கி, "ஆய சிரேஷ்டர்களே! நீங்கள் வீரரென்று பெயர்பெற்றும் இந்த அற்ப மிருகத்தைக் கண்டு அஞ்சத் தொடங்கினீர்கள். இது வீரர்க் கழகன்று" என்றுரைத்து, அந்தக் கேசியசுரனைச் சங்கரித்

தருளினன். அதுகண்டு எல்லோரும் ஆனந்தமடைந்து கிருஷ்ணனை ஸ்தோத்திரஞ் செய்தார்கள். நாரதர் மறைவாக நின்று இந்த வேடிக்கையைப் பார்த்து உள்ளம் பூரித்துத் தயது யாழை மீட்டிக் கண்ணனைத் துதித்தார்.

பின்னர் ஒரு நாள் கிருஷ்ணன் இடைச் சிறுவர்களோடு பசுக்களை ஓட்டிக்கொண்டுபோய்ப் பிருந்தாவனத்தில் ஓரிடத்தில் மேயவிட்டு விளையாடிக்கொண்டிருந்தார். அப்போது வியோமாசுரன் என்னும் ஓர் அசுரன் ஆயச்சிறுவனைப்போல வேடந் தாங்கிவந்து கிருஷ்ணன் முதலியவர்களோடு விளையாடிக்கொண்டிருந்த கோபாலர் பிள்ளைகளில் அநேகரை வஞ்சனையாகக் கொண்டுபோய் ஒரு மலைக்குகையில் மறைத்து விட்டு மீண்டும் வந்து கிருஷ்ணன் முதலிய சிலரோடு விளையாடிக்கொண்டிருந்தான். கிருஷ்ணன் அவனுடைய சூதை யுணர்ந்து, அவனைக்கொன்று குகையில் அகப்பட்டிருந்த சிறுவர்களை மீட்டு வந்தான். பின்னர் எல்லோரும் பாடியிற் சேர்ந்து மகிழ்ந்தார்கள்.

## 31. அக்ரூரர் கிருஷ்ணனைத் தரிசித்தல்

பின்னர்க் கம்சனால் அனுப்பப்பெற்ற அக்ரூரர் ஆயர் பாடிக்குப் புறப்பட்டு, அந்தப் பகவானுடைய கல்யாண குணங்களை யெல்லாம் வாயாரப் புகழ்ந்துகொண்டே போனார்.

அவ்வாறு சென்ற அவர், ஆயர்பாடியிற் சேர்ந்து, கண்ணனைக் கண்டு முடிவணங்கித் தெண்டனிட்டார். கிருஷ்ணனும், அவரை அன்புடன் நோக்கித் தன் திருக்கரங்களால் தழுவி உபசரித்தான். அதன்மேல் அக்ரூரர் மூத்தவரான பலராமரையும் பணிந்தார்; அவரும் இவரை உபசரித்தார். பிறகு அவ்விருவரும் அக்ரூரரை நந்தகோபரிடம்

அழைத்துச் சென்றனர். நந்தகோபரும் அவரை உபசரித்தார். பின்னர் அக்ரூரர் அவர்களிடம் கம்சன் கட்டளையைத தெரிவித்து, அவனுடைய, உள்ளக் கருத்தினையும் வெளியிட்டார். கிருஷ்ணனும், பலராமரும் புன்சிரிப்புடன், "அந்தக் கம்சன் வல்லமையை நாம் அறிவோம்" என்று மதுரைக்குப் புறப்பட இசைந்தார்கள். நந்தகோபரும் இசைந்து, "எல்லோரும் காணிக்கைப் பொருள்களுடன் கம்சனைக் காணப் புறப்படவேண்டும்" என்று ஆயர்களுக்குக் கட்டளையிட்டார். பின்னர் நந்தகோபர் முதலிய எல்லோரும் மதுரைக்குப் பிரயாணமானார்கள். கிருஷ்ணனும், பலராமரும், அக்ரூரரும் இரதத்திலேறிப் புறப்பட்டார்கள். கிருஷ்ணன் பிரிவு குறித்துக் கோபிகைகள் வருந்தினார்கள். நந்தகோபர் முதலிய கோபாலர்கள் முன்னே சென்றார்கள்; கிருஷ்ணன் முதலியவர்கள் பின்னே சென்றார்கள்.

## 32. கிருஷ்ணன் மதுரை சேர்தல்

மேற்கூறியபடி ஸ்ரீராம கிருஷ்ணர்களுடன் புறப்பட்ட அக்ரூரர் யமுனாதீரத்தை அடைந்தார். அப்போது அவர் மத்தியான தேவாராதனை செய்ய நினைத்து, இராமகிருஷ்ணர்களை நோக்கி, "நான் நதியில் நீராடி மத்தியானக் கடனை முடித்துவிட்டு வருகிறேன்; நீங்கள் இங்கேயே இருங்கள்" என்று அவர்களை ஓரிடத்தில் தேருடன் தங்கவைத்துத் தாம் நீராடச் சென்றார். அங்ஙனம் சென்று நீராடி, மந்திரம் ஜபித்துப் பகவானைத் தியானஞ் செய்தார். அப்போது பலராமர் ஆதிசேஷராயிருக்கவும், அவர் மடியில் கண்ணன் வீற்றிருக்கவும் அவர் கண்டார். கண்டு ஆச்சரியங்கொண்டு, "ஸ்ரீ கிருஷ்ணரே ஆதிநாராயணமூர்த்தி: பலராமரே ஆதிசேஷன்"

என்றுணர்ந்து, கிருஷ்ணனை அனந்த விதமாய்த் தோத்திரஞ் செய்தார்.

அதன்மேல் மூவரும் இரதத்தை நடத்திக் கொண்டு போய் மதுராநகரம் சேர்ந்தார்கள். முன்சென்ற நந்தகோபர் முதலியவர்கள் ஒரு நந்தவனத்தில் தங்கியிருந்து இவர்களைச் சந்தித்தார்கள். அங்கே இராமகிருஷ்ணர்க ளிருவரும் இறங்கி, அக்குரூரரை வீட்டிற் கனுப்பிவிட்டு நந்தகோபரு டன் தங்கியிருந்து, மறுநாள் மதுரை நகரத்திற்குட் பிரவே சித்தார்கள். நகரத்திலுள்ள பலரும் அவர்களைக் கண்டு களித்துத் துதித்தார்கள். அவ்வாறு இராமகிருஷ்ணர்கள் வீதியிற் செல்லும்போது, கம்சனுடைய வண்ணானை எதிரே கண்டார்கள். கிருஷ்ணன் அவனிடம் பரிகாசமாக, "நீ எங் களுக்கு வெண்மையான வஸ்திரங்கள் கொடுத்தால்மேன்மை யடைவாய்" என்றார். அவன் கிருஷ்ணனை மதியாமல் பேசி னன். உடனே கிருஷ்ணன் அவனை இருபிளவாகக் கிழித் தெறிந்து கொன்று, அவனிடமிருந்த தூய ஆடைகளையெல் லாம் தன் தோழர்களுக்கு அளித்தான். அத் தருணத்தில் கிருஷ்ணனிடம் பக்தியுள்ள சேணிய னொருவன் உயர்ந்த வஸ்திரங்களால், அக்கிருஷ்ணனையும் பலராமனையும் அலங் கரித்தான். கிருஷ்ணன் அவனுக்கு அனுக்கிரகம் செய்தான்.

பிறகு ஸ்ரீ ராமகிருஷ்ணர்கள் பூமாலைக்காரனாகிய சுதர்மா வென்பவன் மாளிகைக்கு எழுந்தருளினார்கள். அந்த மாலைக் காரன் அவர்களுடைய பேரழகையும், பெருமையான தோற் றத்தையும் பார்த்து, "இவர்கள் மனிதரல்லர்; திருமாலின் அம்சமானவர்களே; யாதோ ஒரு காரணார்த்தமாக இப்படி அவதரித்திருக்கிறார்கள்" என்று சிந்தனை செய்து, அவர் களைப் பணிந்து போற்றி, உயர்ந்த மலர்மாலைகளை அவர்களுக்

குச் சாத்தினான். அவர்களும் அவனை நோக்கி, "அன்பனே! உனக்கு யாதொரு சங்கடமும் உண்டாகாது; பெரிய போகங்களை யெல்லாம் நீ அனுபவிப்பாய்: உன் சந்ததியார் தீர்க்காயுள் பெறுவர்" என்று அவனுக்கு அனுக்கிரகம் செய்து அவ்விடத்தை விட்டு வெளியேறினார்கள்.

அவ்வாறு வெளியேறிய அவர்கள், இராஜ சென்றார்கள். அப்போது கம்சனுக்குச் சந்தனம் கொண்டு போகும் கூனியாகிய திரிவக்கிரை யென்னும் பெண்ணைக் கண்டார்கள். அவ்வாறு கண்டதும் கிருஷ்ணன் அவளைநோக்கி, "நீ யாருக்கு இச்சந்தனத்தைக் கொண்டு செல்கிறாய்? எங்களுக் கிதனைக்கொடுத்தால் சுகமடைவாய்" என்றனன். அவள் "இச்சந்தனத்தைக் கம்சனுக்கன்றி வேறு யாருக்கும் நான் கொடுத்தல் கூடாது; ஆயினும், நீங்கள் அவனைக் காட்டிலும் சிறந்த புருஷர்களா யிருப்பதால் இதை அணிந்துகொள்ளுங்கள்" என்று அவர்களுக்கு அச்சந்தனத்தைக் கொடுத்தாள். கிருஷ்ணனும், பலராமரும் அதனை பூசிக்கொண்டார்கள். பின்னர்க் கிருஷ்ணன் அவளுடைய கூனலைப் போக்கி அவளுக்கு அனுக்கிரகஞ் செய்தான்.

அதன்மேல், கிருஷ்ணனும், பலராமரும் கம்சனுடைய விற்சாலைக்குச் சென்று அங்கிருந்த உயர்ந்த வில்லையெடுத்து முறித்தார்கள். அங்கே உள்ளே காவலர்கள் அவர்களோடெதிர்த்தார்கள். அக்காவலாளிகளை அவர்கள் முறிந்த வில்லைக்கொண்டே அடித்துச் சின்னபின்னப் படுத்திவிட்டுத் தம் கூட்டத்தாருடன் ஓர் உத்தியான வனத்தில் இறங்கிக் காலைப் போசன மருந்திவிட்டுமேல் நடக்கும் கம்சனுடைய செய்கைகளை உணரவேண்டுமென்று தங்கியிருந்தார்கள்.

விற்சாலையிலிருந்த காவலர்கள், பலராம கிருஷ்ணர்கள் வில்லை முறித்ததைக் கம்சனிடம் தெரிவித்தார்கள். அவன் திடுக்கிட்டுச் சினந்து, "நாளை அவர்களுடைய வல்லமையை நான் அறிவேன்." என்று மறுநாள் மல்யுத்தம் நடக்கத்தக்க ஏற்பாடு செய்துவிட்டு, அன்றிரவு மிக்க கவலையுடன் படுத்துக்கொண்டான். அவ்விரவு முழுதும், அவனுக்குச் சிரம் சிரசில்லாமலிருப்பதாகவும், தான் பிணத்தைத் தழுவுவது போலவும் பல துர்க்கனவுகள் தோன்றிக் கொண்டிருந்தன. அவன், இரவெல்லாம் தூக்கமில்லாமலிருந்து விடிந்தபின் மல்யுத்தத்திற்கு இடம் அமைத்துச் சாணூரன், முஷ்டிகன் என்னும் இரண்டு மல்லர்களையும் யுத்தத்திற்கு நியமித்து, நந்தகோபர் முதலிய எல்லோரையும் அதற்கு அழைத்து வரும்படி தூதர்களை அவர்களிடம் அனுப்பினான். அவர்கள் அவ்வாறே யாவரையும் அழைத்து வந்தார்கள். நந்தகோபர் முதலியவர்கள் முன்னரே சென்று கம்சனை வணங்கி யுத்த அரங்கத்தில் ஆசனங்களிலமர்ந்தார்கள். பின்னர் கிருஷ்ணனும், பலராமரும் அங்கே புறப்பட்டுப் போனார்கள்.

அவ்வாறு அவர்கள் செல்லுங் காலத்தில், வழியின் குறுக்கே, கம்சனுடைய யானைப்பாகன் குவலயா பீடமென்னும் யானையை நிறுத்தி அவர்களைக் கொல்லும் பொருட்டு அவர்கள் மீது ஏவினான். உடனே கிருஷ்ணன் அந்த யானையின் கொம்புகளை முறித்து, அதனையும், பாகனையும் கொன்றான். பின்னர்க் கிருஷ்ணனும், பலராமரும் மல்யுத்தம் புரியுமிடத்திற்குச் சென்றார்கள். கம்சன் அவர்களைக் கண்டவுடன், கிருஷ்ணன் குவலயாபீடத்தையும் கொன்றதைப் பற்றிச் சிறிது பயத்தையும், மிகுந்த கோபத்தையு முடையவனாயிருந்தான். அப்போது அவனுடைய ஏவலால் சாணூ

ரன், கிருஷ்ணனை மல்யுத்தத்திற் கழைத்தான்; முஷ்டிகன் பலராமரை அழைத்தான். இருவரும் அவர்களுடன் போர் செய்து சிறிது நேரத்திற்குள் அவர்களைக் கொன்றார்கள்; அங்கு கூடியிருந்தவர்கள் பலராம கிருஷ்ணர்களை வியந்து புகழ்ந்தார்கள்.

## 33. கம்ச வதை

கிருஷ்ணனும், பலராமனும் மல்லர்களைத் தொலைத்துச் சகலரும் கொண்டாட நின்றதைப் பார்த்தவுடன் கம்சன், கடுஞ்சினமடைந்து, தன் பக்கத்தில் நின்ற ஏவலாளரை நோக்கி, "நந்தகோபனுக்கு விலங்கு பூட்டி அவனைச் சிறையி லிடுங்கள்; சிறையிலிருக்கும் வசுதேவனையும் தேவகியையும் வாளுக் கிரையாக்குங்கள்; இச்சிறுவர்களின் தோழர்களைத் துரத்துங்கள்; துஷ்டர்களாகிய இந்தக் கிருஷ்ணனையும் பல ராமனையும் பிடித்துக் கட்டுங்கள்; இவர்களை இப்பொழுதே நான் வதைத்துச் சினந் தீருகின்றேன்" என்று இடிபோல் முழங்கிக் கூறினான்.

அவன், இக் கொடுஞ்செயல்களைக் கூறி முடியுமுன் னமே கிருஷ்ணமூர்த்தி கோபாவேசங்கொண்டு, ஆண் சிங் கத்தைப்போல் ஆகாயத்திற் கிளம்பி, சிம்மாசனத்தின் மீதி ருந்த அந்தக் கம்சன்மீது பாய்ந்தார். அவன் திடுக்கிட்டுக் கீழே குதித்துக் கையில் வாளேந்தி அவருடன் யுத்தஞ் செய்யத் தொடங்கினான். அப்போது கிருஷ்ணன் அவனைப் பிடித்திழுத்துக் கீழே தள்ளி அவனுடைய கிரீடத்தைச் சிதைத்து அவன் மார்பில் குத்தி அவனுயிரைப் போக்கினார்.

கம்சன் இறந்ததை யுணர்ந்து அவனுடைய தம்பியர் வந்து கிருஷ்ணமூர்த்தி, பலராமர் இவர்களுடன் எதிர்த்தார்

கள். அவர்களைச் சிறிது நேரத்திற்குள் பலராமர் கொன்றார். கம்சன் மனைவியர் அவனிறந்தது குறித்துப் புலம்பினார்கள். யாதவர்களும், ஆயர்களும் கிருஷ்ணன் கம்சனைச் சங்கரித்ததைப் பற்றி அவரைப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

## 34. கண்ணன் குரு புத்திரனைக் கொண்டுவந்தது

கம்ச சங்காரமானதும், இராம கிருஷ்ணர்கள் தங்களுடைய பெற்றோராகிய வசுதேவர், தேவகி முதலானோரைச் சிறையினின்றும் நீக்கி வணங்கி மகிழ்வித்துத் தங்கள் பாட்டனை உக்கிரசேன மகாராஜனுக்கு அரசுரிமையை நல்கி, நந்தகோபர், யசோதை முதலியவர்களுக்குத் தங்கள் வரலாறு கூறி, அவர்களை வணங்கித் தக்கபடி உபசரித்துக் கோகுலத்திற் கனுப்பினார்கள். பின்னர் வசுதேவர், கார்க்கேயரால் அவர்களுக்கு உபநயனஞ் செய்வித்தார்.

பின்னர் பலராமரும் கிருஷ்ணமூர்த்தியும் வித்தை கற்றுக்கொள்ளவிரும்பி, அவந்திதேசத்திலுள்ள சாந்தீபினியென்னும் முனிவரையடுத்து, அவரிடம் வித்தியாப்பியாசம் செய்யத் தொடங்கிக் கலைகளனைத்தையுங் கரடறக் கற்றுத் தேர்ந்தனர். அம்முனிவருக்குப் புத்திர னொருவனிருந்தான். அவன் பிரபாகதீர்த்தத்தில் நீராடியபோது பஞ்சஜனன்என்னும் அசுரன் அவனைக் கவர்ந்து சமுத்திரத்தில் மறைத்தனன். அப்போது வித்தையில் தேர்ந்த பலராம கிருஷ்ணர்கள் சாந்தீபினி முனிவரிடத்தில் குருதக்ஷிணை பெற்றுக்கொள்ளுமாறு வேண்டினார்கள். அவர், "இறந்துபோன என் புத்திரனை நீங்கள் கொண்டுவரவேண்டும்; அதுவே தகுந்த தக்ஷிணையாகும்" என்றனர். உடனே கிருஷ்ணன், பலராமரோடு புறப்பட்டுப் போய் வருணனால் பஞ்சஜனனிருக்குமிட முணர்ந்து, அவ

னைக்கொன்று, யமபுரிக்குச் சென்று அங்கிருந்த குருவின் புத்திரனை அழைத்துவந்து அவரிடம் சேர்த்தார். குருவும், குருபத்தினியும் மகிழ்ந்தார்கள். அதன்மேல் கிருஷ்ணனும் பலராமரும் குருவினிடம் விடைபெற்று மதுரைக்கு வந்து சேர்ந்து மகிழ்ந்திருந்தார்கள்.

அப்போது ஆயர்பாடியிலிருந்த நந்தகோபர் முதலிய கோபாலர்களும், யசோதை முதலிய கோபியரும் கிருஷ்ணன் பிரிவு குறித்து வருந்தினார்கள். கிருஷ்ணன் அதனையுணர்ந்து, அவர்களைச் சமாதானப்படுத்தி வரும்பொருட்டு உத்தமர் என்னும் ஓர் உத்தமரைக் கோகுலத்திற் கனுப்பினார். அவர் அங்குச் சென்று அவர்களுக்கு நல்லுபதேசங்களைச் செய்து சமாதானத்தை உண்டாக்கி மீண்டுவந்து கிருஷ்ணனிடம் அவர்களின் சௌக்கியத்தைக் கூறினார்.

அதன்மேல், கிருஷ்ணன், தமக்கு சந்தனங்கொடுத்த குப்ஜையின் வீட்டிற் கெழுந்தருளி அவளை மகிழ்வித்து, அக் குரூரரிடம் சென்று அவரால் உபசரிக்கப்பட்டார்.

அக்காலத்தில் கிருஷ்ணனுடைய அத்தையாகிய குந்தியை அஸ்தினபுரியில் உள்ள பாண்டு கலியாணம் செய்திருந்தான். அவளுக்குத் தருமன், பீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்னும் ஐந்துபுத்திரர்கள் பிறந்திருந்தார்கள். அவர்களுக்குப் பாண்டவர் என்று பெயர். பாண்டுவுக்குத் திருதராஷ்டிரன் என்ற தமையன் ஒருவன் இருந்தான்; அவனுக்குத் துரியோதனன் முதலிய நூறு பிள்ளைகள் இருந்தார்கள்; அவர்களுக்குக் கௌரவர் என்று பெயர். பாண்டவர்கள் சிறுவராயிருக்கும்போதே பாண்டு இறந்துபோனான். அதனால் அப்பாண்டவர்கள் திருதராஷ்டிரனுடைய ஆதரவில் இருந்து வந்தார்கள். கௌரவர்கள் கெட்டவர்களாதலால் பாண்டவர்

களின்மீது பங்காளிப் பகைமை அவர்களுக்குப் பல தீங்கு களைச் செய்து வந்தார்கள்.

இவற்றையெல்லாம் கிருஷ்ணன் உணர்ந்து பாண்டவர் நன்மையைக் கோரித் திருதராஷ்டிரனுக்குப் புத்தி கூறும்படி அக்ருூரரை அஸ்தினபுரிக் கனுப்பினர். அவர் ஆங்குச் சென்று குந்திக்குத் தேறுதல் கூறித் திருதராஷ்டிரனிடம் "நீ தம்பி புத்திரரை ஆதரித்தால் நன்மை அடைவாய்" என்று நல்ல நீதிகளை எடுத்துக்கூறி மதுரைக்கு மீண்டுவந்தார்.

## 35. துவாரகா நிர்மாணம்

அக்காலத்தில் ஜராசந்தனென்பவ னொருவனிருந்தான். அவன் மகததேசத்துக் கதிபதி; அவனுடைய நகரம் கிரிவிரஸம்; அவன் புத்திரிகளைத்தான் கம்சன் விவாகஞ் செய்திருந்தான். கம்சனைக் கிருஷ்ணன் மடித்தன ரென்பதை, ஜராசந்தன் கேள்வியுற்றுக் கோபங்கொண்டு பதினேழு முறை கிருஷ்ணனுடன் போர்புரிந்து தோற்றோடிப்போயினன். தோல்வியுற்றும் கிருஷ்ணனால் அவன் கொல்லப் படாமையாலே; வெற்றி பெற்றதாக நினைத்துச் செருக்குற்றிருந்தான்.

முன்னொரு சமயம் யாதவ புரோகிதரான கார்க்கேயரை, அவர் மைத்துனன், அவருக்குப் பிள்ளை யில்லையென்று, யாதவ சபையில் பரிகசிக்க, யாதவர் நகைத்தனர். இதைக் குற்றமாகக்கொண்டு அம்முனிவர், பன்னிரண்டு வருஷம் சிவமூர்த்தியை நோக்கித்தமக்கு யாதவரை வெல்லத்தக்க புத்திரனொருவன் வேண்டுமென்று கடுந்தவம் புரிந்தார். வரம் சித்தித்து விட்டது. இவ்வாறு அவர் வரம் பெற்றிருப்பதை யவன தேசாதிபதி அறிந்து தனக்குப் புத்திரனில்லாதபடியால் அந்தக் கார்க்கேயரைத் தன்னிடம் அழைத்துக்கொண்டு

போய் அவருக்கு உரிய உபசாரணைகள் பல செய்து, அப் புத்திரப் பேறு தனக்கே யுண்டாகும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று அவரிடம் கேட்டுக்கொண்டான். முனிவர் அவ்வாறே அனுக்கிரகித்தனர். அவ்வனுக்கிரகத்தால் அவனுக்குக் காலயவனனென்கிற குமாரனொருவ னுண்டானான்; அவன் வச்சிராயுதத்தின் முனை போன்ற கடினமான பார்வையுடையவன்; மகாபல பராக்கிரமம் பொருந்தியவன்; அவன் ஜராசந்தனுக்குத் தோழனானான். அவனைத் துணைவனாக்கிக்கொண்டு ஜராசந்தன் பதினெட்டாவது முறை கிருஷ்ணனோடு போருக்கெழுந்து முதலில் அக்காலயவனனை அனுப்பினான். அப்போது கிருஷ்ணனும், பலராமரும், யாதவர்கள் அசசமின்றித் தங்கியிருப்பதற்கு மேற்குக் கடலில் தெற்கு வடக்கில் பன்னிரண்டு யோசனை நீளமுள்ள நகரமொன்றுண்டாக்கி, துவாரகை யென்று அதற்குப் பேரிட்டு, அதில் யாதவரை வசிக்கச் செய்து தாங்கள் மட்டும் மதுரையிலிருந்தார்கள். அப்போது காலயவனன் தன் பரிவாரங்களுடன் வந்து மதுரையை முற்றுகை போட்டனன். அதையுணர்ந்த கிருஷ்ணன் நிராயுத பாணியாக அவனெதிரில் வந்தார். காலயவனன் அவரைக் கண்டு, "இது தான் நல்ல சமயம்" என்று அவரோடு யுத்தமிடலானான். கண்ணபிரான் தோற்றோடுவதுபோல ஓடி ஒரு குகைக்குள் நுழைந்தார். அதில் முசுகுந்தன் படுத்து நித்திரை செய்து கொண்டிருந்தான். அவன் முன்னொரு காலத்தில் அசுரரை அடக்கித் தேவர்களுக் குதவிசெய்ததால் அவர்கள் அவனிடம், "உனக்கென்ன வரம்வேண்டும்?" என்று கேட்டனர். அவன், நெடுங்காலம் நான் விழித்திருந்தபடியால் நித்திரை செய்யவேண்டும்' என்றான். தேவர்கள், "அவ்வாறே நீ நித்திரை செய்; எவன் உன்னை எழுப்புகிறானோ அவன் நீ பார்த்த மாத்திரத்தில்தன்

உடம்பின் அக்கினியாலெரிக்கப்பட்டுச்சாம்பலாவான்'' என்று சொல்லிப் போயினர். அவ்வாறு வரம் பெற்றபின் அவன் அதிற் படுத்தான். கிருஷ்ணன் மேற்கூறியபடி அந்தக் குகையில் புகுந்து மறைந்து கொண்டார். காலயவனன் அவரைப் பின் தொடர்ந்து போய்த் தானும் அதில் நுழைந்தான். நுழைந்தவன் அங்கு நித்திரை செய்து கொண்டிருந்த முசுகுந்தனைக் கிருஷ்ணனென்று நினைத்துக் காலாலுதைத்தான். உடனே முசுகுந்தன் விழித்து அவனைப் பார்த்தான். அந்த நிமிஷமே காலயவனன் எரிந்து சாம்பலாயினன்.

பின்னர்க் கிருஷ்ணன் முசுகுந்தனுக்குப் பிரத்தியட்சமாகித் தமது வரலாறு கூறி, அவனுக்கு மோக்ஷ மார்க்கத்தை யுணர்த்தி மதுரா நகரத்திற்குப் போய்க் காலயவனனுடன் வந்திருந்த சேனைகளை யெல்லாம் சங்கரித்துப் பலராமருடன் மகிழ்ந்திருந்தார்.

அப்போது ஜராசந்தன், காலயவனனும் அவனுடன் சென்ற சேனைகளும் ஒழிந்ததை யுணர்ந்து, அதிகரித்தசேனையுடன் வந்து மதுரையை வளைந்தான். கிருஷ்ணமூர்த்தி அவனுக்குப் பயந்தவர்போல நடித்துப் பலராமருடன் ஓடிக் கோமந்த பர்வதத்தின் பின்புறத்தில் ஒளிந்துகொண்டார். ஜராசந்தன் அவர்களைத் தேடிக் காணமுடியாமல் அந்த மலையில் நெருப்பிட்டுக் கொளுத்தினன். இராம கிருஷ்ணர்களிருவரும் அம்மலையிலிருந்து ஆகாயத்திற் கிளம்பி ஜராசந்தனுடைய சேனைகளைக் கொன்று குவித்துவிட்டுத் துவாரகை போய்ச் சேர்ந்தார்கள். ஜராசந்தன் அவர்களிருவரும் மலையிற் பற்றிய நெருப்பால் இறந்திருப்பார்களென்று மகிழ்ந்து தன் சேனைகள் தனித்திருந்த விடத்திற்குத் திரும்பி வந்தான். சேனைகள் மாண்டு கிடந்தன. அவற்றை அவன் கண்டு ஆச்சரியமடைந்து தன் பட்டணத்திற்குப் போய்விட்டான்.

இராம கிருஷ்ணர்கள் துவாரகை சேர்ந்து மகிழ்ந்திருக்கும்போது ஆனர்த்த தேசத்திற் கரசனை இரேவதனென்பவன், தன் புத்திரியாகிய இரேவதியைப் பலராமருக்கு மணஞ் செய்து கொடுத்தான்.

## 36. ஸ்ரீ ருக்குமிணி திருமணம்

பலராமருக்குக் கலியாணம் முடிந்தபின் அவரும், கிருஷ்ணமூர்த்தியும் துவாரகையில அகமகிழ்ந்திருந்தார்கள். அக்காலத்தில் விதர்ப்பதேசத்தைச் சார்ந்த குண்டினபுரத்தில் பீஷ்மகனென்னும் அரசன் அரசு செலுத்தி வந்தான். அவனுக்கு ருக்குமி முதலிய ஐந்து குமாரர்களும், ருக்குமிணி யென்கிற புத்திரியு மிருந்தார்கள். அந்த ருக்குமிணி கிருஷ்ண மூர்த்தியையே மணம் புரிந்துகொள்ள விரும்பியிருந்தாள். கண்ணபிரானும் அவளைக் கலியாணஞ்செய்ய எண்ணியிருந்தனர். ருக்குமிக்குத் தன் உடன் பிறந்தாளைப் பராக்கிரமமுள்ள மண்டலாதிபதி யொருவனுக்கு மணஞ் செய்து கொடுக்கவேண்டுமென்னும் எண்ணமிருந்தது. அதனால் அவன் ஒருநாள் தன் தந்தையைப் பார்த்து, “தந்தையே! ருக்குமிணியை, சேதிதேசத்தரசனாகிய சிசுபாலனுக்கே கொடுக்கவேண்டும்” என்று சொன்னான்.

பீஷ்மகன் ருக்குமியின் பேசசைத் தடுக்கமுடியாதவனாய் அதற்கிசைந்து, சிசுபாலனுக்கே தன் மகளைக் கொடுப்பதாக வாக்குத் தத்தமுஞ் செய்துவிட்டான். அவனால் விவாக நாள் ஏற்படுத்தப்பட்டது. சகல தேசத்தார்களும் அக்கலியாணத்திற்கு வந்தார்கள். சிசுபாலனும், தன் நண்பரான ஜராசந்தன் முதலானோரோடு, விஜயஞ் செய்திருந்தான். ருக்குமிணி அவ்வாறு தனக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருப்

பதை ஒரு வேதியனால் கிருஷ்ணனுக் கறிவித்து, அவர் வந்து தன்னைக் காக்குமாறு அவரை வேண்டினாள். கிருஷ்ணமூர்த்தி அவ்வாறே பலராமர் முதலியவரோடு சென்று எல்லா அரசர்களுக்கும் முன்னிலையில் அவளைத் தூக்கித் தம்தேர்மீது வைத்துக்கொண்டு போகலானார். அது கண்டு, பவுண்டரகன், விடுதரன், தந்தவக்கிரன், ஜராசந்தன், சாளுவன் முதலிய இராஜ வீரர்கள் போரிட அவர் முன் வந்தார்கள். பலராமரும், அவர் தம்பியாகிய சாத்தகியும் அவர்களை எதிர்த்துச்சின்னபின்னப் படுத்திவிட்டார்கள். அதன்மேல் ருக்மி, "நான் கண்ணனைக் கொல்லாமல் குண்டினபுரந் திரும்புகிறதில்லை" என்று பகவானைப் பின் தொடர்ந்தான். கண்ணபிரான் அவனைப் பிடித்துத் தேர்க்காலிற் கட்டி, மொட்டையடித்துப் பலராமர் விருப்பப் படிவிடுதலை செய்தார். பின் எல்லோரும் துவாரகை சேர்ந்தார்கள். ருக்குமிணிக்கும் கிருஷ்ணமூர்த்திக்கும் திருமணம் சிறப்பாக நிறைவேறியது.

இந்தப் பிரகாரம் கிருஷ்ணன்ருக்குமிணியைக்கலியாணம் செய்து கொண்டபின் அவருக்கு மன்மதன், பிரத்தியும்நன் என்னும் புத்திரனாகி அவதரித்தான். அவன் பிறந்த பத்து நாட்களுக்குள், சம்பராசுரன்: அவனைத் தன் சத்துருவென்று நினைத்துத் தூக்கிக்கொண்டு போய்ச் சமுத்திரத்தில் போட்டுவிட்டுத் தன் பட்டணத்திற் சேர்ந்திருந்தான்.

அந்தக் குழந்தையை ஒரு மீன் விழுங்கியது. பகவத் கிருபையால் மரணமின்றிக் குழந்தை உயிரோடு மச்சத்தின் வயிற்றில் வளர்ந்துவந்தது. ஒரு வலைஞன் தன் குலாசாரப்படி மீன் பிடிக்க வலை வீசியபோது, அக்குழந்தையை வயிற்றிற் கொண்டிருந்த மீன் அவ்வலையிற் சிக்கிக் கொண்டது. செம்படவன் அந்த மச்சத்தைச் சம்பரனிடம் கொடுத்தான்.

அவன், அதனைத் தன் சமையற்காரனிடம் கொடுத்தான். அவன் அதை அறுத்துச் சோதிக்கும்போது அதன் வயிற்றி னுள்ளிருந்த குழந்தையைக் கண்டு, எடுத்துக்கொண்டு போய்ச் சம்பராசுரனால் கொண்டுவந்து வைக்கப்பட்டிருந்த மாயாவதி யென்னும் பெண்ணிடம் கொடுத்தான். அவள் அன்புடன் வளர்த்து வந்தாள்.

அந்த மாயாவதி பூர்வத்தில் இரதியா யிருந்தவள்: மன் மதன் இறந்த பின் மீண்டும் அவனையே அடையவேண்டு மென்று இந்த ரூபத்துடன் தோன்றிச் சம்பரனுக்கு மனைவி யாகாமல் அவனை ஏமாற்றி யிருந்தாள். இவள் பிரத்தியும் னனை வளர்த்து வருங்காலத்தில் நாரதர் இவளிடம் வந்து மன் மதனே பிரத்தியும்நனென்பதை யுணர்த்திச் சென்றார். அதன் மேல் மாயாவதி அவனை மணந்துகொள்ள விரும்பி அவனி டம், தனக்கும் அவனுக்குமுள்ள பூர்வ சம்பந்தத்தைக் கூறிச் சம்பரனைக் கொல்லும்படி சொன்னாள்: இந்த விவரங்களை ஆதியோடந்தமாகக் கேட்ட பிரத்தியும்நன் சம்பரனோடு யுத் தஞ் செய்து ஸ்ரீமந் நாராயணனுடைய பூரண கடாக்ஷத்தால் அவனைக் கொன்று மாயாவதியுடன் தன் தந்தையாகிய கிருஷ்ணமூர்த்தியின் பட்டணத்திற்கு வந்து சேர்ந்தான். கிருஷ்ணன், ருக்குமிணி முதலியவர்கள் இவ்விருவருடைய வரலாறுணர்ந்து ஆச்சரியப்பட்டு ஆனந்தமடைந்தார்கள். கண்ணிழந்தவன் கண் பெற்றுக் களித்ததுபோல ருக்குமிணி பிராட்டி தானிழந்த அருமைப் புதல்வனைப் பெற்றதால் அள விடக்கூடாத மகிழ்ச்சி அடைந்தாள். பின்னர்க் கிருஷ்ண மூர்த்தி பிரத்தியும்நனுக்கு மாயாவதியை மணஞ்செய்துவைத் தார்.

# 37. சத்தியபாமை திருமணம்

கிருஷ்ணமூர்த்தி, புத்திரனுக்கு மணஞ் செய்து களித்திருக்குங் காலத்தில் சத்திராசித்தன் என்னும் ஓர் அரசனிருந்தான். அவன் சூரியனிடத்தில் மிகுந்த பக்தி செலுத்தி வந்தான். அதனால் சூரியன் வியாதியைப் போக்கத் தக்கதும், ஐசுவரியத்தை யுண்டாக்கத் தக்கதுமாகிய சியமந்தகமென்னும் ஒரு சிறந்த மணியை அவனுக்குக் கொடுத்தான். அவன் அம்மணியை வைத்துப் பூஜித்து வந்தான். கிருஷ்ணமூர்த்தி அதை வாங்கி உக்கிரசேன மகாராஜனுக்குக் கொடுக்க விரும்பி அவனிடம் கேட்டார். அவன் அதில் விருப்பமுடையவனாயிருந்ததால் அதைக் கொடுக்க இசைந்திலன்.

அதன்மேல் ஒரு நாள் அவன் தம்பியாகிய பிரசேநன் அந்த மணியைக் கழுத்திலணிந்துகொண்டு வேட்டைக்குப் போனான். அவனை ஒரு சிங்கம் கொன்றது. அந்தச் சிங்கத்தைச் சாம்பவன் கொன்று அம்மணியை யெடுத்துக்கொண்டு போய்த் தன் குகையில் குழந்தையின் தொட்டிலினடுவிற் கட்டி வைத்தான்.

சந்திராசித்தன், தன் தம்பி வராமற் போகவே கிருஷ்ணமூர்த்தி சியமந்தக மணியைக் கேட்டபோது தான் கொடாததால் அவரே பிரசேநனைக் கொன்று மணியைக் கவர்ந்து கொண்டாரென்று நினைத்து, அதனை எங்கும் பிரஸ்தாபித்து விட்டான். கிருஷ்ணமூர்த்தி அந்த அபவாதத்தைத் தீர்க்கும் பொருட்டுச் சிலரை அழைத்துக்கொண்டு போய் இறந்து கிடந்த பிரசேநனையும், சிங்கத்தையும் கண்டு; கூடவந்தவர்களை நிறுத்திவிட்டுச் சாம்பவனிருந்த குகைக்குட் பிரவேசித்துத் தொட்டிலிற் கட்டியிருந்த மணியைப் பார்தது அதனருகிற் போய் நின்றார். சாம்பவன் அவரைக்கண்டு சினந்து அவ

ரோடு யுத்தம் புரிந்தான். இருவருக்கும் பல தினங்கள் யுத்தம் நடந்தது. வெளியில் நின்ற ஜனங்கள் பன்னிரண்டு நாட்கள் வரை காத்திருந்து கிருஷ்ணமூர்த்தி வாராததால் அவருக்கு ஏதோ ஆபத்து நேர்ந்ததென்று நினைத்துத் துவாரகைக்குப்போய் வசுதேவர் முதலியவர்களிடத்தில் அவர் செய்தியைக் கூறினார்கள். வசுதேவர் முதலியோர் கிருஷ்ணன் சௌக்கியமாய் வரவேண்டுமென்று துர்க்கையைத் துதித்துக் கொண்டிருந்தார்கள்.

பின்னர்க் கண்ணன் சாம்பவனோடு இருபத்தெட்டு நாட்கள்வரை இளைக்காமல் யுத்தஞ்செய்தார். முடிவில் சாம்பவன், விஷ்ணுமூர்த்தியின் இராமாவதார காலத்தில் அவருக்குத் தொண்டுசெய்த பக்தனாதலின், கிருஷ்ணமூர்த்தி விஷ்ணுவின் அம்சமென்றுணர்ந்து அவரைப் பணிந்து, அந்தச் சியமந்தக மணியை அவருக்கு அளித்துத் தன் புத்திரியாகிய சாம்பவதியையும் மணஞ்செய்து கொடுத்தான்.

அதன்மேல் கண்ணன், மணியுடன் சாம்பவதியை அழைத்துக் கொண்டு துவாரகை போய்ச் சேர்ந்தார். வசுதேவர் முதலியோர் அவரைக்கண்டு மகிழ்ந்தார்கள். பின்னர் அவர் உக்கிரசேனனுடைய இராஜ சபையில் சத்திரசித்தனை வரவழைத்து அவனிடம், பிரசேநன் இறந்த உண்மைச் செய்தியைக் கூறிச் சியமந்தக மணியைக் கொடுத்தனர். சத்திராசித்தன் உண்மை யுணர்ந்து கிருஷ்ணமூர்த்தியின்மீது தான் வீண் அபவாதங் கூறியதற்காக மனம்வருந்தி அவரைச் சமாதானஞ் செய்யும்பொருட்டு அவருக்குத் தன் புத்திரியாகிய சத்தியபாமையைக் கொடுத்து அந்த மணியையும் அவளுக்குச் சீதனப் பொருளாக அளித்தான். கிருஷ்ணமூர்த்தி அந்த மணியை வாங்காமல் சத்தியபாமையை மட்டும் ஏற்றுக்

கொண்டார். அதன்மேல் கண்ணனுக்கும் சத்தியபாமைக்கும் விதிப்படி மணம் நிறைவேறிற்று.

அக்காலத்தில், அஸ்தினு புரத்திலிருந்த துரியோதனன் முதலியவர்கள், வாரணுவதத்தில் வஞ்சனையாக அரக்கு மாளிகை யொன்றமைத்து அதில் பாண்டவர்களையும், குந்தி தேவியையும் குடியேற்றுவித்து நெருப்பிடுவித்தார்கள். அவர்கள் தெய்வச் செயலால் பிழைத்துப் போய் வேத்திரகீயத்தி லிருந்தார்கள். அப்படி யிருக்கப் பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் நெருப்பினுலிறந்துபோனுர்களென்ற செய்தி எங்கும் பரவிற்று. பாண்டவர்கள் பிழைத்திருக்கும் செய்தி கிருஷ்ணமூர்த்திக்குத் தெரியும். எனினும், அவர் உலகத்தாரைப் போல நடிக்கத் தொடங்கி விசனமுற்று அவர்கள் செய்தியை விசாரித்து வரும் பொருட்டுப் பலராமருடன் அஸ்தினுபுரம் சென்று வீஷ்மர், விதுரர், திருதராஷ்டிரன் முதலியவர்களைக் கண்டு, துக்கம் விசாரித்து மனம் வருந்தி யிருந்தார்.

அப்போது சததன்வா என்பவன், சத்திராசித்தன் சத்தியபாமையைத் தனக்குக் கொடுக்கவில்லையென்று அவன் மீது விரோதங் கொண்டிருந்தனன். அத்தருணத்தில் அக்குரூரனும், கிருதவர்மன் என்பவனும், அந்தச் சததன்வா விடத்தில், "சத்திராசித்தனிட மிருக்கும் சியமந்தக மணி உன்னிடமிருப்பதே பொருத்தமாகும்" என்று துர்போதனை செய்தனர். அதைக் கேட்டு அவன், சத்திராசித்தன் இரவில் நித்திரை செய்யும்போது அவனை வெட்டிக் கொன்றுவிட்டுச் சியமந்தக மணியைக் கைப்பற்றினுன்.

சத்தியபாமை, தன் தந்தை இறந்ததன் பொருட்டு மிகவும் துக்கமுற்று உடனே அஸ்தினுபுரம் சென்று நடந்ததைக்

3088



கண்ணபிரானிடம் கூறினாள். அவர் உடனே புறப்பட்டுத் துவாரகைக்கு வந்து சததன்வாவைக் கொல்ல முயன்றார். அவன் அதை யுணர்ந்து சியமந்தக மணியை அக்குரூரனிடம் கொடுத்துவிட்டு விதர்ப்பதேசத்தின் பக்கம் நோக்கி ஓடினான். கிருஷ்ணமூர்த்தி பலராமருடன் அவனைத் தேடிப் போனார். விதர்ப்ப தேசத்தில் அவன் கண்ணபிரானாலும், பலராமராலும் கண்டு பிடிக்கப்பட்டான். அதனைக் கண்டவுடன் பலராமர் பின் தங்கிவிட்டார். கிருஷ்ணமூர்த்தி அவன் சமீபத்திற் சென்று சக்கரத்தால் அவன் சிரசை அறுத்துவிட்டு அவனி டம் சியமந்தகமணி அகப்படாமையால் வெறுங்கையோடு மீண்டு பலராமரிடம் வந்தார். கிஷ்ணனிடத்தில் மணியில்லா ததைப் பலராமர் பார்த்து அவர் தமக்கதைக் காட்டக்கூடா தென்று மறைத்து விட்டாரென்று நினைத்து அவர்மீது மனஸ் தாபங் கொண்டு அவரிடம் சொல்லாமலே விதர்ப்ப தேசம் சென்று, அத்தேசத்தரசனால் பூஜிக்கப்பட்டிருந்தார். கண்ணபி ரான் துவாரகைக்குச் சென்று சத்தியபாமையிடம் சததன்வா வைக் கொன்ற விவரங்கூறி மணியைப்பற்றி ஆலோசித்துக் கொண்டிருந்தார்.

அப்போது அக்குரூரன், தன்னிட மிருந்த சியமந்தக மணியைக் கிருஷ்ணமூர்த்தி கவர்ந்து கொள்வாரென்று பயந்து, தான் தீர்த்த யாத்திரை போகவேண்டுமென்று அவ ரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு காசிக்குச் சென்று அங்கே தங்கியிருந்தான். அக்காலத்தில் ஜனங்கள் கண்ணபிரான் சததன்வாவைக் கொன்று சியமந்தக மணியைக் கைப்பற்றி மறைத்து வைத்திருக்கின்றார் என்று அபிப்பிராயங் கொண் டார்கள். அதையுணர்ந்த கண்ணபிரான் உடனே அக்குரூரனை வரவழைத்து இராஜ சபையில் நிறுத்தி அவனிடமிருந்த மணி

யை வாங்கி எல்லோரு மறியக் காட்டி, மீண்டும் அவனிடமே கொடுத்து அந்த அபவாதத்தைத் தீர்த்துக் கொண்டார். கோபித்துச் சென்ற பலராமரும் உண்மை யுணர்ந்து, மனஸ் தாபம் நீங்கித் துவாரகைக்கு வந்தார்.

அதன்மேல் பாண்டவர்கள் துரோபதையைக் கலியாணஞ் செய்துகொண்டு திருதராஷ்டிரன் நியமித்தபடி காண்டவ பிரஸ்தத்தில் தங்கியிருந்தனர். அப்போது கிருஷ்ண மூர்த்தி அவர்களிடம் சென்று அவர்களுடைய ஸௌக்கியத்தை விசாரித்து அவர்களால் உபசரிக்கப்பட்டிருந்தார். அப்படியிருக்கும்போது ஒரு சமயம் விநோதமாகப் போது போக்கும் பொருட்டு அருச்சுனனுடன் வனத்திற்குச் சென்று அங்கு விளையாடி யமுனையைக் கண்டு அதிலிறங்கித் தாக சாந்தி செய்துவிட்டு அதன் கரையில் உலாவிக் கொண்டிருந்தார். அங்கே அவரையே நாயகராக அடைய வேண்டு மென்று சூரியன் புத்திரியாகிய காளிந்தி தவஞ்செய்து கொண்டிருந்தாள். அவளைக் கிருஷ்ணமூர்த்தி கண்டு அவளுடைய வரலாற்றை விசாரிக்குமாறு அர்ச்சுனனிடம் கூறினர். அவன் அவ்வாறே விசாரித்து அவருக்குத் தெரிவித்தான். கிருஷ்ணன் அவளை அழைத்துக்கொண்டு அருச்சுனனுடன் காண்டவ பிரஸ்தம் வந்து, சில தினங்கள் தங்கித் தருமருடைய விருப்பப்படி அவருக்கு இந்திரபிரஸ்த மென்னும் நகரத்தை யுண்டாக்கிக் கொடுத்துப் பாண்டவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு துவாரகைக்கு வந்து காளிந்தியை மணஞ்செய்து மகிழ்ந்திருந்தார்.

அதன்மேல் ஸ்ரீகண்ணபிரான், அவந்தி தேசத்திற் கரசராகிய விந்தாநுவிந்தரின் தங்கையாகிய மித்திர விந்தையை மணந்தும், நக்ன சித்தின் பசுக்களைக் காப்பவனும், யசோதை

யின் தம்பியுமாகிய கும்பாண்டனிட மிருந்த ஏழு எருதுகளை அடக்கி, அந்த நக்ன சித்தின் குமாரியாகிய சத்தியவதியை மணந்தும், கேகய தேசாதிபதியின் புத்திரியாகிய பத்திரையை மணந்தும், மத்திர தேசாதிபதியாகிய விருசேனன் குமாரியாகிய இலக்குமணையைக் கலியாணஞ்செய்தும் ஆக எட்டு மனைவியருடன் இன்புற்றிருந்தனர். அக்காலத்தில் அவருக்குப் பின் சுபத்திரை யென்னும் பெண் பிறந்து பருவமடைந்திருந்தாள். அவளை, தீர்த்தயாத்திரை செய்துவந்த அருச்சுனனுக்கு மணமுடித்து வைத்தார்.

## 38. நரகாசுர வதை

ஒரு நாள் நாரதர் தேவலோகத்திலிருந்த பாரிஜாத புஷ்பம் கொண்டுவந்து கிருஷ்ணமூர்த்தியிடம் கொடுத்து அவரை வணங்கினர். அவர் அம் மலரை ருக்குமிணிக்குக் கொடுத்தார். நாரதர் சத்தியபாமையிடம் சென்று அவ்விவரத்தைக் கூறிப் போனர். பின் கிருஷ்ணன் சத்திய பாமையிடம் சென்றார். அவள், பாரிஜாத புஷ்பத்தை அவர் தனக்குக் கொடுக்கவில்லையென்று பிணங்கிக் கொண்டிருந்தாள். கிருஷ்ணமூர்த்தி, "பாரிஜாத விருக்ஷத்தையே உன் கொல்லையில் கொண்டு வந்து சேர்க்கிறேன்" என்று அவளுக்கு வாக்களித்து அவளுடைய பிணக்கைத் தீர்த்தார்.

விஷ்ணுமூர்த்தி வராகாவதார மெடுத்த காலத்தில் அவருக்கும், பூமிதேவிக்கும் நரகாசுரன் பிறந்தான். அவனுக்குச் சாகாவரம் தரவேண்டுமென்று பூமிதேவி விஷ்ணுவிடம்வேண்டினள். அவர், "இவன் கொடிய அசுரனாய் எல்லோருக்கும் தீங்கு செய்வானாதலின் இவனுக்கு அவ்வரங் கொடுத்தல் கூடாது; இவனைப்பின்னால் நானே சங்கரிப்பேன்; அப்போது

இவனுடைய குற்றங்களை உனக்குத் தெரிவித்து உன் சம்மதம் பெற்றுத் தான் அக்காரியத்தைச் செய்வேன்'' என்று கூறினர். அப்பால் அவன் தலையெடுத்துத் தேவர் பொருள்களைக் கைப்பற்றி அவருக்குத் தீங்கு செய்து வந்தான். விஷ்ணுவே கிருஷ்ணனும், பூமிதேவியே சத்தியபாமையாயும் அவதரித்திருந்தபடியால், நரகாசுரனுடைய உபத்திரவத்தை இந்திரன் சகிக்க முடியாமல் அதனைத் தீர்க்கும்படி கிருஷ்ணமூர்த்தியிடம் வந்து முறையிட்டான்.

அப்போது கிருஷ்ணமூர்த்தி, பூமிதேவியின் அம்சமாகிய சத்தியபாமைக்கு நரகாசுரனுடைய குற்றங்களைத் தெரிவித்து, அவளுக் கெதிரிலேயே அவனைக்கொன்று, தாம் அவளுக்குக் கொடுத்த வாக்குத் தத்தத்தின்படி பாரிஜாத விருக்ஷத்தையும் கொண்டு வரலாமென்று கருதிக் கருடனை அழைத்து அவன் மீதில் சத்தியபாமையுடன் அமர்ந்து நரகாசுரன் வசிக்கும் பிராக் ஜோதிஷ மென்னும் நகரத்திற்குச் சென்று அங்குள்ள அரண்களை யெல்லாம் அழித்து உட்பிரவேசித்தார். அத்தருணத்தில், நரகாசுரனுடைய சேனாதிபதியாகிய முரன்வந்து அவருடன் எதிர்த்தான். அவனைச் சிறிது நேரத்தில் கண்ணபிரான் மடித்தார். பின்னர் அவன் புத்திரர்களாகிய விபாவசு, வசு, நபசுவான், அருணன், தாம்ரன், அந்தரிக்ஷன், சிரவணன் என்னும் எழுவரும், பீடனென்னும் சேனாதிபதியுடன் வந்து கிருஷ்ணமூர்த்தியுடன் எதிர்த்து மடிந்தார்கள்.

அதன்மேல் நரகாசுரன் வந்து கண்ணபிரானோடு கடும்போர் புரிந்தான். அவனையும் கிருஷ்ணமூர்த்தி சங்கரித்து பூமிதேவியின் வேண்டுதலால் அவனுடைய புத்திரனாகிய பகதத்தனுக் கருள்செய்து, அவனையும், நரகாசுரனால் சிறைப்படுத்தப்பட்டிருந்த பல பெண்களையும் அழைத்துக் கொண்டு

தெய்வலோகம் போய், நரகாசுரன் வசப்பட்டிருந்த தேவர்களுடைய பொருள்களை அவர்களுக்குச் சேர்ப்பித்து, இந்திரனால் பூஜிக்கப்பட்டுத் துவாரகை அடைந்தார். நரகாசுரன் பட்டணத்திலிருந்து அழைத்துவரப்பட்ட பெண்கள் கண்ணனுக்குப் பணி புரிந்து அவருடைய அன்பையும், அபிமானத்தையும் பெற்றிருந்தார்கள்.

பின்னர்க் கிருஷ்ணர், சத்தியபாமையின் விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டுப் பாரிஜாத விருக்ஷத்தைத் துவாரகைக் கனுப்பும்படி நாரதர் மூலம் இந்திரனுக்குத் தெரிவித்தார். இந்திரன் அதற்கிசையாமல் கிருஷ்ண மூர்த்தியை அவமதித்துப் பேசினான். கண்ணன் அதையுணர்ந்து தெய்வலோகஞ் சென்று அவனோடு யுத்தம் புரிந்தனர். காசிபர் வந்து அந்தப் போரை நிறுத்திப் பாரிஜாத விருக்ஷத்தைக் கிருஷ்ண மூர்த்திக்குக் கொடுக்குமாறு இந்திரனிடம் கூறினார். அவன் அவ்வாறே அதனைக் கொடுத்துக் கண்ணபிரானை வணங்கிச் சென்றான். அதன்மேல் கிருஷ்ணன் அதனைக் கொண்டு வந்து சத்திபாமையின் தோட்டத்திற் சேர்த்து மகிழ்ந்திருந்தார்.

## 39. ருக்குமி வதை

கிருஷ்ணமூர்த்தி மனைவியரோடு மகிழ்ந்திருக்குங் காலத்தில் அவருக்குப் பிரத்தியும்நனோடு, எல்லா மனைவியரிடத்தும் பல புத்திரர்கள் பிறந்தார்கள். ருக்குமிக்கு, ருக்குமவதி யென்னும் பெண் பிறந்தாள். ருக்குமினி தன் மகனாகிய பிரத்தியும்நனுக்கே மணஞ்செய்ய விரும்பி அவ்விருப்பத்தை ருக்குமியிடம் தெரிவித்தாள். அவன், கிருஷ்ணன் தனக்கு விரோதியாயிருந்தும் தங்கை சொல்லைத் தட்டாமல் தன் குமாரத்தியைப் பிரத்தியும்நனுக்கு விவாகஞ் செய்து கொடுத்

தான். பின்னர் பிரத்தியும்நனுக்கு அநிருத்தன் பிறந்தான். அவனுக்கு ருக்குமி, தன் பௌத்திரியாகிய உரோகிணியைத் தன் நகரத்தில் மணஞ் செய்து கொடுத்தான்.

இந்த விவாகம் நடந்தகாலத்தில் ருக்குமி பல தேவரோடு சூதாடத் தொடங்கி மூன்றுட்டங்களில் தானே கெலித்தான். அதன்மேல் சில ஆட்டங்களில் பலபத்திரர் ஜெயமடைந்தார். அந்த வெற்றியை ருக்கிமி ஒத்துக்கொள்ளவில்லை. ஆகாய வாணி உண்மை கூறியும் அவனே அதன் மறுத்தான். அதனுல் பலராமருக்கும் அவனுக்கும் வாது நிகழ்ந்தது. அப்போது பலராமர் சினங்கொண்டு ருக்குமியையும் அவனுக்குச் சார்பா யிருந்தவர்களேயும் மாய்த்துவிட்டனர். கிருஷ்ணன் இந்த வதத்தைக் குறித்து, மூத்தவரை வெறுத்தால் அவருக்கு வெறுப்புண்டாகுமென்றும், நன்றென்றுரைத்தால் ருக்குமிணி தேவியாருக்கு மனம் வேறுபடுமென்றும் நினைத்து ஒன்றும் மொழியாமல் மௌனமா யிருந்தனர். பின்னர் அவர் விவாக மான தம் பேரனையும், அங்கு வந்துள்ள யாதவரையும் கூட்டிக்கொண்டு துவாரகைக்கு எழுந்தருளினர்.

## 40. பாணசுர கர்வபங்கம்

பலிச் சக்கரவர்த்திக்கும், அவன் தேவி விந்தியாவலிக்கும் நூறு புத்திரர்கள் பிறந்திருந்தார்கள். அவர்களுள் மூத்தவன் பாணசுரன்; அவன் கம்சனுக்கு நண்பன்; சிவபெருமான் வரத்தால் ஆயிரங்கைகள் பெற்றுச் சோணிதபுரத்தில் அரசு செய்துவந்தான். அவன் சிவபெருமானையே யுத்தத்திற் கழைத்தான். அவர் அவனை நோக்கி, "உன் கோட்டையின் துவஜம் எக்காலத்தில் அற்று விழுகின்றதோ அப்போது உன்னிலும் வலியவன் வந்து உன் வலிமையை அடக்குவான்"

என்று கூறி, அவன் தம்மை நோக்கிச் செய்த தவத்தால் விநாயகர் முதலியவர்களோடு அவனுடைய கோட்டையைக் காத்து வந்தார்.

அதனமேல் பாணாசுரன் மிக்க வல்லமைபெற்றுத் தேவர்களை வென்று உலகத்தாருக்குப் பல தீங்குகளைச் செய்து வந்தான். அக்காலத்தில் அவனுக்கு உஷை என்னும் ஒரு பெண்ணிருந்தாள். அவள் ஒரு நாளிரவு தூங்கும்போது கிருஷ்ணன் பேரனாகிய அநிருத்தனைக் கனவிற்கண்டு அவனையே கலியாணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று அவனிருக்குமிடம் தெரியாமல் தன் தோழியாகிய சித்திரரேகையிடம் தன் எண்ணத்தைத் தெரிவித்தாள். அவள் ஆராய்ந்து அநிருத்தனைத் தெரிந்து, அவன் தூங்கும்போது மஞ்சத்துடன் அவனைத் தூக்கிக்கொண்டு வந்து உஷையிடம் சேர்த்தனள். உஷை அவனை மறைத்து வைத்து அவன்மீது அன்பு செலுத்திவந்தாள். பாணாசுரன் ஒரு நாள் அவனைக் கண்டு கோபித்துச் சிறையிலிட்டான்.

கிருஷ்ணமூர்த்தி முதலியவர்கள் அநிருத்தனைக் காணாமல் வருந்தினார்கள். அப்போது நாரதர் வந்து அநிருத்தன் பாணாசுரனால் சிறைப்படுத்தப் பட்டிருப்பதை அவர்களுக்குக் கூறினார். கிருஷ்ணமூர்த்தி துணைவர்களுடன் பாணாசுரனை எதிர்க்கச் சென்றார். அத்தருணத்தில் பாணாசுரனுடைய கோட்டையின் துவஜம் அற்று வீழ்ந்தது. உடனே அவ்வசுரன் சிவமூர்த்தி முதலியவர்களோடு வந்து கிருஷ்ணமூர்த்தியை எதிர்த்தான். கண்ணபிரான், சிவபெருமான் முதலியவர்களையும் தோல்வியடையச் செய்து, பாணாசுரனுடைய ஆயிரங் கைகளில் நான்கு கரங்கள் தவிர மற்றவைகளைத துணித்து விட்டார். அப்போது சிவபெருமான் அவனைக் கொல்லாது

விடுக்க வேண்டுமென்று கிருஷ்ணனிடம் வேண்டினர். அவ்வாறே அவர் அவனை விடுத்தார். பின்னர்ப் பாணாசுரன், அநிருத்தனையும், உஷா தேவியையும் அழைத்துக்கொண்டு வந்து கிருஷ்ணமூர்த்தியின் திருச் சமுகத்திற் சேர்த்து வணங்கினன். கண்ணன் அவர்களை அழைத்துக்கொண்டு துவாரகைக்கு வந்து, அவர்களுக்கு விதிப்படி கலியாணஞ் செய்துவித்து மகிழ்ந்திருந்தார்.

அப்படி யிருக்குங் காலத்தில் ஒரு நாள் கிருஷ்ணமூர்த்தி யாதவர்களோடு ஒரு நந்தவனத்திற சென்று விளையாடிக் கொண்டிருந்தார். அப்போது அங்கே ஒரு கிணறு இருந்தது. இட்சுவாகு வமிசத்திற் பிறந்து அயோத்திக் கரசனாயிருந்த நிருகன், வழக்குக்காகத் தன்னிடம் வந்திருந்த பெரியோர்களைக் கவனியாமலிருந்த குற்றத்தால், அவர்களின் சாபம் பெற்று ஓணாகி அக்கிணற்றில் தங்கியிருந்தான். யாதவர்கள் தாகங்கொண்டு நீர் வேண்டி அக்கிணற்றுக்குச் சென்று அந்த ஓணானைக் கண்டு வெளியேற்ற முயன்று, அவர்களால் முடியாமல் கிருஷ்ணமூர்த்தியிடம் அதனைக் கூறினர்கள். அவர் சென்று அவ்வோணானைக் கரத்தா லெடுத்து வெளியிற்போட்டார். அவரால் அம்மன்னனுடைய சாபந் தீரக்கூடியதாயிருந்தபடியால் அவர் கரம் அவன்மீது பட்ட மாத்திரத்தில் அம்மன்னன் ஓந்தி வடிவம் நீங்கித் தன் யதார்த்த வடிவம் பெற்றுக் கிருஷ்ணமூர்த்தியிடம் தன் வரலாறு கூறி அவரை வணங்கிச் சென்றான். அதன்மேல் கிருஷ்ணன், "பெரியோர்களை மதிக்காதவர்களுக்கு இத்தகைய தீங்குதான் நேரும்" என்று கூறித் துவாரகை சேர்ந்திருந்தார்.

அதன்மேல் கிருஷ்ணமூர்த்தி கோபாலர்களையும், கோபிகைகளையும் பார்த்துவரும்படி பலராமரை ஒருநாள் கோகு

லத்திற் கனுப்பினர். அவர் சென்று அவர்களிடம் க்ஷேமம் விசாரித்து அங்கே சில தினங்கள் தங்கியிருந்தார். அப்போது ஒருநாள் பலபத்திரர் யமுனையை அடுத்துள்ள ஒரு மணல் மேட்டிற் போய், ஆயர்களோடு விளையாடி, வாருணிதேவியால் அங்குநின்ற கடப்பமரத்தின் மூலம் அளிக்கப்பெற்ற மதுவை யருந்தி ஆனந்தித்தார். அப்போது ஜீராட மனங்கொண்டு சற்று தூரத்திலிருந்த யமுனா நதியைத் தம்மிடம் வருமாறு அழைத்தார். மதுபானத்தால் இவர் அழைக்கிறாரென்று யமுனை பராமுகமாகயிருந்தாள். அதனால் பலதேவர் கோபங் கொண்டு தமது ஆயுதமாகிய கலப்பையால் அந்தநதியைத் தம் பக்கந்திருப்பி அதில் இஷ்டப்படிமுழுகியருளினர். இவ்வண் ணம் ஜீராடிய அந்த மகானுபாவருக்கு இலக்ஷணமான காந்தி யொன்றுண்டாயிற்று. வாருணி அவருக்கு வருணனால் சமர்ப்பிக்கப்பட்ட ஒரு தாமரை மலரையும், கடல்போல நீல நிறம் வாய்ந்த இரண்டு திருப்பர் வட்டங்களையும், குண்டலா பரணத்தையும், ஒரு தாமரை மாலையையுங் கொண்டுவந்து கொடுத்தருளினள். அவற்றை அவர் பரிவுடன் தரித்துக் கொண்டு ஆயர்பாடியில் வந்து மகிழ்ச்சி கொண்டிருந்தனர்.

## 41. பௌண்டரக வாசுதேவ சம்மாரம்

குருதேசத்தில், பௌண்டரக வாசுதேவன், என்னும் பெயருடைய அரசனொருவன் இருந்தான். அவன் கிருஷ்ண னைப்போல் வேடம் பூண்டு விஷ்ணுமூர்த்தியின் பஞ்சாயுதங் கள் முதலிய சகல அடையாளங்களையும் போலித்தன மாகத் தரித்துக்கொண்டு வந்து கிருஷ்ணனைப் போருக் கழைத்தான். கண்ணன் போர் செய்ய இசைந்தனர். அவன் காசி மன்னனைத் துணை சேர்த்துக்கொண்டு கண்ணனுடன்

போர் செய்தான். கிருஷ்ணமூர்த்தி திருவாழியால் அவன் சிரத்தைக் கொய்து அவனுக்குத் துணையாக வந்த காசி ராஜ னையும் கொன்றார். அதுகண்ட அந்தக் காசிராஜன் புத்திர னாகிய சுதக்ஷணன், யாகஞ்செய்து ஒரு பூதத்தை உண்டாக் கிக் கண்ணனைக் கொல்ல ஏவினான். கிருஷ்ணன் அதன்மீது சக்கரத்தை ஏவினார். அந்தச் சக்கரம் பூதத்தையும், சுத க்ஷணனையும் கொன்று காசி நகரத்தையும் எரித்துவிட்டது.

## 42. துவித சங்காரம்

பலராமர் கோகுலத்திற்குப் போயிருந்தபோது ஒரு நாள் கோபிகைகளுடன் ரைவத பர்வத மடைந்து விளையாடிக் கொண்டிருந்தார். அங்கே துவிதனென்னும் வானர சிரேஷ்ட னொருவனிருந்தான். அவன் நரகாசுரனுக்குப் பிராண நேசன்; அந்த வானரேசனாகிய துவிதன், தன்நண்பனாகிய நரகாசுரனைக் கிருஷ்ணன் மடித்தானென்று கோபமெய்தி யிருந்தான். அப் படியிருந்த அவன் மேற்கூறியபடி விளையாடிக் கொண்டிருந்த பலராமரைக் கண்டு, கிருஷ்ணன் தமையனென்று விரோ தங்கொண்டு, அவரெதிரே சென்று நின்று, பல்லிளித்தல், சிறீப்பாய்தல் முதலிய தன் குல சேஷ்டைகளைச் செய்தனன். பலராமர் நயபயங்காட்டி அவனை மிரட்டினார். அவன் அந்த மிரட்டுக்குச் சிறிதும் அஞ்சாது தன் தீயச்செயல்களை மேலும் மேலும் நடத்தலுற்றான். அதனால் பலராமர் சினங்கொண்டு, தமது கை முஷ்டியினால் அவனுடைய தலையிலடிக்க, அவன் உதிரங் கக்கிக்கொண்டு பூமியில் வீழ்ந்து மாண்டொழிந்தான். அதன்மேல் பலராமர் இரண்டு மாதங்கள் சென்று துவார கைக்கு வந்தார். அவருக்கு மனைவியாகிய ரேவதி யிடத்தில் நிசிதன், உலமுகன் என்னும் புத்திரரிருவர் பிறந்தனர்.

கிருஷ்ணமூர்த்தியும், பலராமரும் இவ்வாறு பலஜெயங்களைப்பெற்று மேற்கூறியபடி துவாரகையில் வாழுங்காலத்தில், அஸ்தினாபுரத்திலிருந்த துரியோதனனுக்கு இலக்குமணையென்னும் ஒரு பெண்ணிருந்தாள். அவளுக்கு மணஞ்செய்ய வேண்டித் துரியோதனன் சுயம்வரம் ஏற்படுத்தினான்; அப்போது கிருஷ்ணனுக்குச் சாம்பவதியிடம் பிறந்த புத்திரனாகிய சாம்பன் என்பவன் அங்கே போய் எல்லோருக்கும் முன்னிலையில் அந்தப் பெண்ணைக் கவர்ந்துகொண்டுவந்தான். அதைக்கண்டு துரியோதனன், வீஷ்டுமர், துரோணர் முதலியவர்கள் அவனைப் பிடித்துச் சிறையில் வைத்தார்கள். இந்த விஷயத்தைக் கேள்வியுற்ற கண்ணன் முதலானோர் கோபங்கொண்டு துரியோதனனோடு போர்செய்ய எழுந்தனர். பலராமர் அவர்களை நிறுத்தி, "நானே சென்று சாம்பனை மீட்டு வருகிறேன்" என்று சொல்லி அஸ்தினாபுரம் நண்ணினார். அவர் வரவைக்கண்ட சர்ப்பக்கொடியோன் முதலியோர் எதிர் சென்று, அவரை அர்க்கியம், பாத்தியம் முதலானவைகளால் உபசரித்தனர். அவர் துரியோதனனைப் பார்த்து, "அன்பனே! எங்கள் உக்கிரசேன மகாராஜர் என்னை இங்கு அனுப்பினார்; நீங்கள் சிறைவைத்திருக்கும் சாம்பனை மீட்டு வரச் சொன்னார்; உங்கள் கருத்து யாதோ?" என்று கேட்டனர். கௌரவர் யாதவர்களை அவமதித்துப் பேசினர்; 'யாதவர்களுக்கு இராஜ வீரத்துவம் உண்டோ' என்று நகையாடினர். அவர் கூறியவற்றைக் கேட்டதும் பலராமர் கோபங்கொண்டு, "அப்படியா? யாதவர் வீரத்தை இதோ நான் காட்டுகிறேன்; கௌரவர் மதத்தை அடியோடு ஒழித்து விடுகிறேன்; அஸ்தினாபுரத்தைப் பெயர்த்துக் கங்கையில் வீழ்த்துகிறேன்" என்று ஆக்ரமித்துக் கூறினர்; தமது கலப்பையை

அந்நகரின் தென்புறத்தில் மாட்டி அதைக் கிளப்பினர். உடனே கௌரவர் பயங்கர முற்றவராய், இலக்குமணையையும், சாம்பனையும் அவரிடம் கொண்டுவந்து விட்டு வணங்கினர்கள். அலாயுதர் அவர்களோடு துவாரகைக்குத் திரும்பினர். பின்னர்க் கிருஷ்ணமூர்த்தி, சாம்பனுக்கும், இலக்குமணைக்கும் திருமணஞ் செய்வித்துச் சிந்தை களித்திருந்தனர். அக்காலத்தில் நாரதர், துவாரகைக்கு வந்து, கிருஷ்ணமூர்த்தி தம் மனைவியர் எல்லோருக்கும் மனக் களிப்பையுண்டாக்கி வாழும் மகிமையைத் தரிசித்து அவரைத் துதித்துச் சென்றார்.

## 43. ஜராசந்த சங்காரம்

மகத தேசாதிபதியான ஜராசந்தன், முன் பதினெட்டு முறை கிருஷ்ணரோடு சண்டை செய்து அவரை ஒன்றுஞ் செய்ய முடியாமற் போனபின், பல தேசத்தரசர்களையும் வென்று சிறைப்படுத்தி அக்காலத்தில் மிகுந்த அகங்காரிப்போடு கிரிவிரசமென்னும் தன்னுடைய நகரத்திலிருந்தான்.

அவனிடம் சிறைப்பட்ட அரசர்கள், தங்கள் துன்பத்தைக் கிருஷ்ணமூர்த்தி ஒருவரே நீக்கத்தக்கவர் என்று நினைத்து அந்த எண்ணத்தைத் தெரிவிக்கும்படி ஒரு தூதனை இரகசியமாக அவரிடம் அனுப்பினர்கள். ஒரு நாள் கண்ணபிரான் உக்கிரசேனனுடைய இராஜ சபையில் இருக்கும்போது அவரிடம் அத்தூதன் வந்து அரசர்கள் தெரிவித்ததைக் கூறினன். கிருஷ்ணமூர்த்தி, "விரைவில் நான் ஜராசந்தனைக் கொன்று அவ்வரசர்களைச் சிறையினின்றும் மீட்பேன்" என்று அத்தூதனிடம் சொன்னர். அவன் மீண்டு போய்க் கிருஷ்ணனின் உறுதி வாக்கியத்தை மன்னர்களுக்குரைத்தான். அரசர்கள் தேறுதலடைந்தார்கள்.

அதன்மேல நாரதர் கிருஷ்ணமூர்த்தியிடம் வந்தார். அவர், அம்முனிவரை உபசரித்து, "இப்போது பாண்டவர்கள் எங்கே யிருக்கிறார்கள்?" என்று வினவினார். நாரதர், "அவர்கள் இந்திரபிரஸ்தத்தி லிருக்கிறார்கள்; உம்முடைய உதவியைக்கொண்டு இராஜசூயயாகம் நிறைவேற்ற உத்தேசித்திருக்கிறார்கள்" என்று கூறிப் போயினார். பாண்டவர்களுக்கு அந்த யாகத்தைச் செய்யவேண்டுமென்று நாரதரே முன் கூறினார்; ஆதலின் அவ்விவரம் நாரதருக்குத் தெரியும்; அதனாலேயே கண்ணனிடம் அவர் அதனைக் கூறினார்.

கிருஷ்ணமூர்த்தி அதைக் கேட்டவுடன், "தருமர் அந்த யாகத்தைச் செய்யத் தொடங்கினால் அதன் மூலமாகவே நாம் ஜராசந்தனை ஒழித்து விடலாம்" என்று யோசித்து மந்திரியாகிய உத்தவரை நோக்கி, "ஜராசந்தனைத் தொலைப்பதற்கு நாம் என்ன உபாயஞ் செய்யலாம்?" என்று கேட்டார். உத்தவர், "இராஜசூயயாகஞ் செய்பவர் எல்லா அரசர்களையும் ஜெயிக்கவேண்டும்; தருமர் அதனைச் செய்ய எண்ணியிருக்கிறார்; தாங்கள் இந்திரபிரஸ்தஞ் சென்றால், அவர் தங்களைக் கண்டவுடன் தங்கள் அனுமதி பெற்று அதனை செய்யத் தொடங்கிவிடுவார்; அப்போது தாங்கள் பீமசேனனால் அந்த ஜராசந்தனை மாய்த்துவிடலாம்" என்று கூறினர். கிருஷ்ணன் இந்திரபிரஸ்தத்திற்குப் போனார். பாண்டவர்களும், குந்தியும், துரோபதையும், சுபத்திரையும், அவரைக்கண்டு உபசரித்தார்கள். அவர் சில தினங்கள் அங்கே தங்கியிருந்தார்.

அப்படியிருக்கும்போது அவர் ஒரு சமயம் அருச்சுனனுடன் போய் இந்திரனுடைய காண்டவ வனத்தை அக்கினி தேவனுக்கு இரையாக்கி அவனைத் திருப்திசெய்து, அவனிடத்தில் அருச்சுனனுக்குக் காண்டீபமென்னும் வில்லும்,

இரதமும் வாங்கிக்கொடுத்தார். அவ்வன தகனத்தினின்றும் மயனைத் தப்பவைத்து அவனால் தருமருக்கு ஒரு சபை கட்டு வித்தார்.

அதன்மேல் தருமர் ஒரு நாள், "இராஜசூயயாகஞ் செய்ய நாங்கள் விரும்பியிருக்கிறோம்; இதனைத் தேவரீரே நிறைவேற்றி வைக்கவேண்டும்" என்று கிருஷ்ணனிடம் தெரிவித்தார். அவர் அதற்கிசைந்து, "முதலில் நீங்கள் எல்லா அரசர்களையும் அடக்கி, அவர்களிடம் கப்பம் வாங்கித் திக்கு விஜயம் செய்யவேண்டும்" என்றார். தருமரால், பீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் ஆகிய நால்வரும் நான்கு திக்குகளிலும், திக்கு விஜயத்திற்கு அனுப்பப்பட்டார்கள்; எல்லா அரசர்களையும் வென்று அவர்களிடம் கப்பம் வாங்கி வந்தார்கள்; ஜராசந்தனிடம் கப்பம் வாங்கவில்லை. அந்த யாகத்திற்கு அவனை வெல்வதே முக்கியமானதா யிருந்தது. தருமர், "அவனை எப்படி வெல்லலாம்?" என்று கிருஷ்ண மூர்த்தியிடம் வினவினார். அவர், "என்னுடன் பீமனையும், அருச்சுனனையும் அனுப்பினால், நாங்கள் அவனை வென்று வருவோம்" என்றார். தருமர் அவ்வாறே மூவரையும் அனுப்பினார். அவர்கள் பிராமண அதிதிகளைப்போல் வேடந்தரித்துக் கிரிவிரசமென்னும் பட்டணத்திற்குப் போய் ஜராசந்தன் பூஜை செய்யும்போது அவனைக்கண்டு, "நாங்கள் உம்மிடம் ஒரு காரியத்தைப்பெற நாடிவந்தோம்; நீர் எங்கள் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யவேண்டும்" என்று சொன்னார்கள். அவன், 'இவர்கள் க்ஷத்திரியர்களாகவேயிருக்கவேண்டும்' என்று சந்தேகமுற்று, 'உங்களுக்கு நான் செய்யத்தக்கதென்ன?" என்று அவர்களிடம் வினவினான். கிருஷ்ண மூர்த்தி அவனிடம், தங்களை இன்னவரென் றுணர்த்தி,

"நீ படையின்றி எங்களோடு தனித்து யுத்தம் செய்யவேண்டும்" என்று சொன்னார். அதைக்கேட்டதும் ஜராசந்தன் கடுஞ் சினமடைந்து, "நீ பன்முறை என்னிடம் அடிபட்டோடியவன்; அருச்சுனன் சிறுவன்; பீமன் சிறிது பருத்த தேகமுடையவனாயிருக்கின்றான்; ஆதலின், நான் இவனுடன் போர் தொடுக்கின்றேன்" என்று பீமனோடு கதாயுத்தம் செய்யத் தொடங்கினான். பதினைந்து நாட்கள் வரை இருவருக்கும் யுத்தம் நடந்தது. ஜராசந்தன் இளைக்கவில்லை. அவன் பிறந்த காலத்தில் இருபிளவாயிருந்து காளியால் ஒட்டப்பெற்று உயிர் பெற்றவனாதலின் அவனை இரண்டாகப் பிளந்து போட்டால் மாத்திரமே அவன் சாவான். இந்த இரகசியம் கிருஷ்ண மூர்த்திக்குத் தெரியும். ஆதலின், முடிவில் அவர் அந்த இரகசியத்தைப் பீமனுக்குத் தெரிவிக்கும்படி ஒரு துரும்பை யெடுத்து இரண்டாகப் பிளந்துபோட்டார். உடனே பீமன் அக்குறிப்பை யுணர்ந்து ஜராசந்தனை இரண்டாகக் கிழித்துப் போட்டான். அவன் மாண்டான்.

பின்னர் கண்ணபிரான் ஜராசந்தன் மகனாகிய சகாதேவனுக்குப் பட்டங்கட்டி, அரசர்களைச் சிறைமீட்டு அங்கிருந்த திரவியங்களை யெடுத்துக்கொண்டு பீமார்ச்சுனர்களுடன் தருமரிடம் வந்து சேர்ந்தார். அவர் மகிழ்ந்து கிருஷ்ணமூர்த்தியைக் கொண்டாடினார்.

## 44. சிசுபால வதை

பின்னர்த் தருமர், இராஜசூய யாகத்தைச் செய்யத் தொடங்கினார். அதற்குச் சகல தேசத்தரசர்களும் வந்திருந்தார்கள். சேதி நாட்டரசனாகிய சிசுபாலனும் வந்திருந்தான். இவன் கிருஷ்ணனுக்கு அத்தை பிள்ளை. இவன் பிறந்த காலத்

தில் மூன்று கண்களோடும், நான்கு கரங்களோடும் விளங்கினான். இவனுடைய தோற்றத்தைக் கண்டு இவன் தாயாகிய சாத்துவதி வருந்தினாள். அப்போது, "எவனால் இவன் சாகப் போகின்றானோ அவன் மடியில் இவனை வைத்தால் இவனுக்கு அதிகமாயுள்ள கண்ணும் கைகளும் மறையும்" என்று அசரீரி கூறிற்று. அதன்படி அவள் இவனுடைய விரோதியை உணர்ந்து கொள்ளும் பொருட்டு இவனைப் பலர் மடியில் வைத்துப் பார்த்துவந்தாள். அவ்வழக்கப்படி ஒருநாள் கிருஷ்ணமூர்த்தியின் மடியில் வைக்கும்போது இவனுக்கு ஒரு கண்ணும் இரண்டு கைகளும் மறைந்தன. சாத்துவதி கிருஷ்ணனே இவனுக்கு விரோதியென்றுணர்ந்து, அவரிடம், "என் பிள்ளை செய்யும் நூறு குற்றங்களை நீ பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்று வேண்டினள். கண்ணபிரான் அதற்கிசைந்தனர். அதன்மேல் இவன் காளைப்பருவமடைந்த பின் கிருஷ்ணமூர்த்தியிடம் பகைகொண்டு அவரைப் பலவாறு நிந்தித்து அவருக்குப் பல கெடுதிகளைச் செய்து கம்சனுக்குச் சிநேகனாயிருந்துவந்தான். கிருஷ்ணமூர்த்தி, தாம் வாக்குறுதி செய்தபடி அவன் குற்றங்களைப் பொறுத்துவந்தார்.

இத்தகைய இந்தச் சிசுபாலனும், மற்ற அரசர்களும் மேற்கூறியபடி கூடியிருக்கும்போது தருமர் யாகத்தை நடத்தினார். அதில் சபையாருக்குத் தாம்பூலம் கொடுக்க வேண்டிய சமயம் வந்தது. அப்போது தருமர், வியாசர் அபிப்பிராயப்படி, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்கு முதற்றாம்பூலம் கொடுத்து மரியாதை செய்தார். சிசுபாலன் அதைக்கண்டு தருமர் முதலியவர்களையும், கண்ணபிரானையும் நிந்தித்துப் பேசினான். கிருஷ்ணமூர்த்தி அவனுடைய நூறு பிழைகள் முடியுமட்டும் பொறுத்திருந்தார். அதன்மேல் அவனோடு யுத்தஞ் செய்யத்

தொடங்கினர். அவன் மிகுந்த சாமர்த்தியத்தோடு சண்டை புரிந்தான். சிறிதுநேரத்திற்குள் கிருஷ்ணமூர்த்தி சக்கரத்தை விடுத்து அவனுடைய தலையை அறுத்து வீழ்த்தினர்.

அதன்மேல் யாகம் பூர்த்திபெற்றது. சகல தேசத்தரசர்களும் தருமரிடம் மரியாதைகளைப் பெற்றுச் சென்றனர். துரியோதனன் அவரால் மிகக் கொண்டாடப்பட்டும், அவருக்குச் செல்வம் அதிகரித்ததைப் பற்றிப் பொறாமைகொண்டு சென்றான். கண்ணபிரான் சில தினங்கள் வரை இந்திரபிரஸ்தத்திலேயே பாண்டவர்களால் பூஜிக்கப்பட்டிருந்தார்.

அப்படி யிருக்கும்போது, முன்னே ருக்குமினி கலியாணத்தில் பலராமரால் தோல்வியடைந்து சென்ற சாலவன் என்பவன் தவஞ்செய்து சிவனிடம் வரம்பெற்று, ஆகாயத்திற் சஞ்சரிக்கும் இரும்புப் பட்டணமொன்று நிர்மித்து அதனுடன் வந்து யாதவர்களை நாசஞ் செய்யும் பொருட்டுத் துவாரகை அடைந்து பிரத்தியும்நனோடு யுத்தஞ் செய்தான். பிரத்தியும்நன், அவனுடைய மந்திரியான தியுமத்சேநனைக் கொன்றான். மேலும் அவன்பிரத்தியும்நன் முதலியவர்களோடு யுத்தம் புரிந்துகொண்டிருந்தான். அச்செய்தி கிருஷ்ணமூர்த்திக்கு எட்டிற்று. உடனே அவர் பாண்டவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு பலராமருடன் துவாரகைக்கு வந்து அவரை நகரத்தில் காவலாக நிறுத்திவிட்டுப்போய் அந்தச் சாலவனோடு யுத்தஞ்செய்து அவனைக் கொன்றார்.

அதன்மேல் அந்தச் சாலவன், சிசுபாலன் முதலியவர்களுக்குத் தோழனும், கிருஷ்ணருக்கு அத்தை மகனுமாகிய தந்தவக்கிரன் அவரோடு யுத்தத்திற்கு வந்தான். அவனையும் கண்ணபிரான் மாய்த்தனர். பின்னர் அவன் தம்பியாகிய விடூரதன் அவரை எதிர்த்தான்; அவனையும் அவர் கொன்றனர்.

## 45. கண்ணன் பாண்டவர்க்குச் செய்தசகாயங்கள்

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி மேற்கூறிய பகைவர்களை நாசஞ் செய்து துவாரகையில் இன்புற்று வாழ்ந்து வந்தனர். அப்போது, தருமருடைய இராஜசூய யாகத்தில் பொறாமை கொண்டு சென்ற துரியோதனன், பாண்டவர்களைத் தந்திரமாக அஸ்தினபுரிக்கு வரவழைத்து அவர்களோடு மாயச் சூதாடி, அவர்களுடைய நாடுநகரங்களையெல்லாம் கைப்பற்றினான்; துரோபதையை இராஜசபையில் நிறுத்தி அவள் துகிலை உரியுமாறு தன் தம்பி துர்ச்சாதனனை ஏவினான். அவன் அவ்வாறே அக்கொடுங் காரியத்தைச் செய்ய அவளை இழுத்து வந்தான். அவள் கிருஷ்ணரைத் துதித்தாள். உடனே அவர், அவளுடைய துகில் வளருமாறு செய்தனர். அதுகண்டு துரியோதனன் முதலியோர் வியந்து நடுங்கினர். பின்னர்த் துரியோதனன், பாண்டவர்கள் பன்னிரண்டு வருஷங்கள் வரை வனவாசம் செய்தும், ஒரு வருஷம் நாட்டில் கரந்துறைந்தும் வந்தால் அவர்களுக்கு நாடு கொடுப்பதாகச் சொல்லி அவர்களைக் காட்டிற் கோட்டினன். அவர்கள் அவ்வாறே பன்னிரண்டாண்டுகள் வனவாசஞ் செய்தார்கள். இவ் வனவாசத்தில் அவர்களுக்கு நேர்ந்த சில இடையூறுகளையெல்லாம் கிருஷ்ணமூர்த்தி தீர்த்தருளினார்.

பின்னர் அவர்கள் ஒருவருடம் விராடபுரத்தில் தங்களை ஒருவருங் காணாதபடி மறைந்திருந்து வெளிப்பட்டுத்துரியோதனனிடம் உலூக முனிவரைத் தூதனுப்பித் தங்கள் இராஜ்ஜியத்தைக் கேட்டார்கள். அவன் அதைக் கொடுக்க மறுத்துவிட்டான். அதன்மேல் கிருஷ்ணமூர்த்தியும அவனிடம் சென்று பாண்டவர்க்கு நாடுகேட்டார் அப்போதும் அவன் இசையாமல் அவரை அவமதித்துப் பேசினான். அவர்

அவனிடம் யுத்தத்திற்கு முடிவுசெய்துகொண்டு, விதுரர் வீட்டில் விருந்துண்டு, கர்ணனுக்குப் பிறப்புணர்த்திப் பாண்டவர்க் கனுகூலமான சில காரியங்களையும் முடித்துக்கொண்டு திரும்பினர். பாண்டவரும், கௌரவரும் யுத்தத்திற்கு நாள் குறிப்பிட்டுப் படைத்துணை சேர்க்கத் தொடங்கினர்கள் அப்போது கிருஷ்ணமூர்த்தி அருச்சுனனுக்குத் தேர்ச்சாரதியாக இசைந்தனர். பலராமர், அந்த யுத்தத்தில் எவருடனும் சேரலாகாதென்று தீர்த்த யாத்திரை சென்றனர்.

அதன் மேல் பாரத யுத்தம் இருகக்ஷியாராலும் தொடங்கப்பட்டது. அப்போது கிருஷ்ணமூர்த்தி தேரைச் செலுத்த அருச்சுனன் அதன்மீதமர்ந்து போர்க்களம் சென்றான். அவ்வாறு சென்றவன் படைகளைப் பார்த்து எல்லோரும் அவனுடைய சுற்றத்தாராகவே யிருந்ததால் அவர்களைக்கொல்வதற்கு மனந்துணியாமல், "நான் என்பந்துக்கள் மடியும்படி யுத்தஞ் செய்யமாட்டேன்" என்றான். அப்போது கிருஷ்ணமூர்த்தி; மனிதர்களுக்குள் ஒருவர்க்கொருவர் பந்தமுடையவர்களல்லரென்பதையும், ஜீவர்களின் இயற்கையையும், கடவுள் இயற்கையையும், உலக இயற்கையையும், மனிதர்களின் குலதர்மங்களையும் அவனுக்கு எடுத்துக் கூறிக் கீதையை உபதேசஞ் செய்து யுத்தஞ் செய்வது க்ஷத்திரியருக்கு உரிய தொழிலென்பதை உணர்த்தினர். அதன்மேல் அவன் போர் செய்யத் தொடங்கினன். இருவகைப் படைகளும் எதிர்த்தன. பதினெட்டு நாள்வரை அந்தப் பாரதப்போர் நடந்தது. அந்த யுத்தத்தில் துரியோதனன் தவிர மற்ற கௌரவர்களெல்லோரும் ஒழிந்தார்கள். பாண்டவ சேனையுள்ளும் பெரும் பாகம் ஒழிந்தது. போர் நடக்குங் காலத்தில் கிருஷ்ணமூர்த்தி, பாண்டவர்களுக்குப் பல சகாயங்களைப் புரிந்து வந்தார். முடி

வில் தனிப்பட்டிருந்த துரியோதனனுடன் பீமன் யுத்தஞ் செய்தான்.

அப்போது, முன்னே தீர்த்த யாத்திரை சென்ற பலராமர், தம்மை அவமதித்த சூதபுராணிகரைக் கொன்று, முனிவர்களின் வேண்டுகோளால் மீண்டும் பிழைப்பித்து பின்னர், அவ்விருடியர் கேட்டுக்கொண்டபடியே பல்லனைச்சங்கரித்துப் பல தேசங்களுக்குச் சென்று தீர்த்தமாடி விட்டு அங்கேவந்து யுத்தஞ் செய்யவேண்டாமென்று துரியோதனனையும் பீமனையும் தடுத்தார். அவர்கள் அதைக் கேளாமல் யுத்தஞ் செய்தார்கள். பலராமர் 'விதிப்படி எதுவும் நடக்கும்' என்று துவாரகைக்குப் போய்விட்டார்.

பின்னர்க் கிருஷ்ணமூர்த்தியின் சகாயத்தால் பீமன் துரியோதனனைக் கொன்றான். பாண்டவர் வெற்றியடைந்தார்கள். பின்னர் அச்வத்தாமன் துரியோதனனுக்குப்பரிந்து பாண்டவரைக் கொல்ல முயன்றான். கண்ணபிரான் அவர்களை மறைத்துக் காப்பாற்றினார். அதன்மேல் அச்வத்தாமன் அவர்கள் பிள்ளைகளாகிய இளம் பஞ்ச பாண்டவர்களைக் கொன்று, பிரமாஸ்திரத்தால் பாண்டவர் மனைவிமார்களின் கருப்பங்களை அழித்தான். அப்போது கிருஷ்ணமூர்த்தி, அருச்சுனன் புத்திரனாகிய அபிமன்யுவின் மனைவி கருப்பத்தைமட்டும் காத்தருளினார். அக் கருப்பத்தினின்றும் பரீக்ஷித்து பிறந்தான். இவ்வாறு பாண்டவர்கள் வெற்றி பெற்ற பின் கிருஷ்ணமூர்த்தி தருமருக்கு இராஜ்ஜிய பட்டாபிஷேகம் செய்துவிட்டுத் துவாரகைக்குப் போய் யாதவர்களோடு இன்புற்றிருந்தனர்.

## 46. கண்ணபிரான் பிற்காலத்திற் செய்த அற்புதங்கள்

அப்படி யிருக்குங் காலத்தில், கிருஷ்ணரோடு இளமையிற் கல்வி கற்ற குசேலர் என்பவர், மனைவி மக்களுடன் மிக்க தரித்திரமடைந்து, அதனைத் தீர்த்துக் கொள்ளும்பொருட்டு மனைவியால் தூண்டப்பட்டுக் கண்ணபிரானைக் காணத் துவாரகைக்குச் சென்றார். அப்போது கண்ணனுக்குக் கொஞ்சம் அவலைத் துணியில் முடிந்துகொண்டு போயிருந்தார். கிருஷ்ணமூர்த்தி அவரைக் கண்டு உபசரித்து, அவர் கொண்டு வந்த அவலில் ஒரு கைப்பிடி அள்ளி வாயிலிட்டு அவருக்கு மிகுந்த ஐசுவரிய முண்டாக்கினார்.

மற்றொரு சமயம் தீர்த்த ஸ்நானஞ் செய்தற்குச் சமந்த பஞ்சகம் சென்று அங்கு வந்த பாண்டவர், கோபாலர், யாதவர் முதலியவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்து, கோபிகைகளை மோக்ஷமடையச் செய்தார். குருக்ஷேத்திரத்தில் தம்மைத் தரிசிக்க வந்த முனிவர்களைக் கொண்டு வசுதேவருக்கு யாகம் நிறைவேறச் செய்து நாரதரால் தம்முடைய சொரூபத்தை அந்த வசுதேவருக்குணர்த்தினார்; தேவகியின் விருப்பத்தின்படி தமக்கு முன்பிறந்து கம்சனால் கொல்லப்பட்ட புத்திரர்களறுவரையும், பலராமருடன் பாதாளலோகஞ் சென்று பலிச்சக்ரவர்த்தியிட மிருந்துகொண்டு வந்து அவளுக்கும், வசுதேவருக்கும் காட்டி அவர்களை மகிழ்வித்தனர்.

பின்னொரு சமயம், துவாரகையைச் சார்ந்த குசஸ்தலி நகரத்திலிருந்த பிராமணர் தமது குழந்தைகளைப் பறிகொடுத்து வருந்த, அவர்களை மீட்டுத் தருகிறேனென்று அருச்சுனன் அவருக்கு வாக்களித்து அதை நிறைவேற்ற முடியாமல் அக்கினிப் பிரவேசமாகத் துணிந்தபோது அவன் பொருட்டு அவனுடன் வைகுண்டஞ் சென்று அக்குழந்தைகளைக் கொண்டுவந்து அந்த வேதியருக்குக் கொடுத்தார்.

## 47. ஸ்ரீகிருஷ்ணன் பரமபதமடைதல்

இவ்வாறு ஸ்ரீகண்ணபிரான் பற்பல அற்புதங்களை நடத்தித் துவாரகையில் வாழ்ந்திருக்குங் காலத்தில், அவர் குறித்து வந்த பூபாரந் தீர்த்தல் முதலிய எல்லா வேலைகளும் முடிந்து பரமபதம் அடையவேண்டிய காலம் சமீபித்தது. அப்போது கிரகங்களும், நக்ஷத்திரங்களும் நிலைமாறியும் பூகம்பமுண்டாயும், ஆகாயத்தினின்றும் கொள்ளி வீழ்ந்தும் நாசக் குறிகளுண்டாயின. அவற்றைக் கண்டவுடன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி யாதவகுலம் அழிந்துபோமென்றறிந்து உத்தவரை யழைத்து அவரை நோக்கி, "நமது குலத்திற்கழிவு நேரப்போகின்றது; ஆதலின் நீர் இப்போதே பதரிகாசிரமம் சென்று தவஞ் செய்து எனது பதத்தை அடைவீராக; இனி இந்தத் துவாரகையும் சமுத்திரத்தில் முழுகிப்போகும்" என்று கூறியருளினார். உத்தவர் அவ்வண்ணமே நடந்துகொண்டனர்.

பின்னர் யாதவர் ஒருநாள் கிருஷ்ணமூர்த்தியின் பிள்ளையாகிய சாம்பனுக்குப் பெண்வேடந் தரித்து, மகரிஷிகள் முன்பு கொண்டுபோய், "மகானுபாவர்களே! இப்பெண் கருவுற்றிருக்கிறாள்! இவள் வயிற்றினின்றும் பிறப்பது ஆணா பெண்ணா?" என்று அவர்களைக் கேட்டுப் பரிகசித்தனர். மகரிஷிகள், "இவர்கள் நம்மைப் பரிகசிக்க வந்தார்கள்; இவர்களுக்கு முடிவை யுண்டாக்க வேண்டும்" என்றெண்ணி, "இவள் பெறுவது ஆணுமன்று பெண்ணுமன்று; ஓரிருப் புலக்கையேயாம்; அதனால் உங்கள் குலம் அழிந்துவிடும்" என்றார்கள். இதனை அவர்கள் உக்கிரசேன மகாராஜனுக்குத் தெரிவித்தனர். அவர், "அப்படி இருப்புலக்கை யுண்டானால் அதைப் பொடியாக்கிக் கடலில் போட்டு விடுங்கள்" என்றார். ரிஷிகள் சொல்லியபடி சாம்பன் இருப்புலக்கையைப் பெற்றான். யாதவர்கள் அதைப் பொடித்துக் கடலி

விட்டனர். அது கூரிய முனையையுடைய கோரைப்புற்களாக முளைத்தது. அந்த உலக்கையை அவர்கள் தூளாக்கும் போது சிந்திய தூள் ஒன்று அம்பின் முள்ளைப்போலிருந்தது. அவர்கள் அதையுங் கடலிலெறிந்தார்கள். அதனை யொருமீன் விழுங்கிற்று. அம்மீன் செம்படவரால் பிடிக்கப்பட்டுச் சேரனென்னும் ஒரு வேடனிடம் சேர்க்கப்பட்டது. அவன் அதை அறுத்தான். அதில் மேற்கூரிய முள்ளிருந்தது. அவன் அதைத் தன் அம்பில் சேர்த்துக் கூராக்கி வைத்திருந்தான்.

அதன்மேல் ஒருதினத்தில் கிருஷ்ணமூர்த்தியின் கட்டளையால் யாதவர்கள் அவருடன் பிரபாச க்ஷேத்திரம் சென்றார்கள். அப்போது அவர்களுக்குள் கலகமுண்டாயிற்று; அதனால் அவர்கள் மேற்சொன்ன கோரைப்புற்களைப் பறித்துக்கொண்டு ஒருவரோடொருவர் சண்டையிட்டு மாண்டனர். அதன்மேல், தேவர்கள், "பகவானே! நீர் இனிச் சோதிக் கெழுந்தருளலாம்; வந்த காரியம் பூர்த்தியாய் விட்டது" என்று ஒரு தூதன் மூலமாக ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக் கறிவித்தார்கள். பகவான் அதற்கு உடன்பட்டனர்.

யாதவர் இறந்த பின்பு, பலராமர் யோகமார்க்கத்தால் தேகத்தை விட்டனர். அவர் திருமுகமண்டலத்தினின்றும் ஒரு சர்ப்பமெழுந்து கடலிற் புகுந்தது அவர், தம் பதத்தை அடைந்தார். பிறகு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தாமும் சோதிக் கெழுந்தருள நினைத்துத் துவாரகையின் வெளிப்புறத்தில் ஒரு விருக்ஷத்தின் அடியிற் சயனித்திருந்தார். அப்போது மேற்கூறிய சேரன் என்னும் வேடன் அவ்வழியாக வந்தான். அவனுக்கு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் பாதம் ஒரு மிருகம் போல் காணப்பட்டது.

அதனால் அவன், முற்கூறிய இரும்பு முள் சேர்க்கப்பட்ட அம்பை அவர் பாதத்தில் பிரயோகித்தான். உடனே

பகவான், சதுர்ப்புஜங்களுடன் தேஜோன்மயமான ஒரு புருஷனாகத் தோன்றினார். வேடன் அவரைக் கண்டு, தன் குற்றத்தை மன்னிக்குமாறு பிரார்த்தித்தான். கண்ணபிரான் அவனுக்குத் தேறுதல் கூறிச் சுவர்க்கமளித்துத் தாமும் திருமேனியைவிட்டுப் பரமபதத்திற் கெழுந்தருளினார்.

இவ்விவரங்களை உக்கிரசேனர், வசுதேவர், அருச்சுனன் முதலியவர்களுணர்ந்து அங்கே வந்து துக்கத்தை அடைந்து வருந்தினார்கள். அர்ச்சுனன் ஸ்ரீகிருஷ்ண பலராமர்களுடைய திருமேனிகளைத் தகனம் செய்வித்தான். கண்ணபிரானின் தேவியராகிய ருக்குமிணி பிராட்டி முதலிய எண்மரும் அவருடைய திருமேனியோடு அக்கினியிற் பிரவேசித்தார்கள். இரேவதியும் பலபத்திரர் திருமேனியோடு அனலிற் குளித்தனள். இஃதறிந்த உக்கிரசேனர், வசுதேவர், தேவகி, உரோகிணி என்போரும் அக்கினிப்பிரவேசமானார்கள். அருச்சுனன் அவர்களுக்கு ஈமக்கிரியைகளைச் செய்வித்தனன். பிறகு அருச்சுனன், கண்ணபிரான் பிரிவு குறித்து வருந்தி அவருடைய அவதாரத்தின் உண்மையை உணர்ந்து தெளிந்து துவாரகையில் எஞ்சியிருந்த யாதவ விருத்தர்களையும், பாலர்களையும் இந்திரபிரஸ்தத்திற் கழைத்துச் சென்றான். தருமர் முதலியவர்கள், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி முதலியவர்களுடைய முடிவை யுணர்ந்து மனங் கலங்கினார்கள். பின்னர் அவர்களும் பரீக்ஷித்துக்குப் பட்டங் கட்டிவிட்டுச் சுவர்க்கத்தை அடைந்தார்கள். துவாரகையும் கடலில் மூழ்கிவிட்டது.

இவ்வாறு ஸ்ரீ கிருஷ்ணபகவானால் பூமிபாரம் தீர்க்கப்பட்டதனால் பூமாதேவி இன்பமெய்தி மகிழ்ந்தாள்.

சுபம்!!!

"மன்னுயி ரனைத்து முய்ய மாநிலத் தவ தரித்துப்
பொன்னுலகோரும் போற்றப் பொறைதனைத் தீர்த்தகண்ணன்
பன்னருஞ் சரிதை தன்னைப் பக்தியிற் படிப்போர் கேட்போர்
துன்னரும் போகமெய்தித் தூய்பத மேறு வாரே."

THE B. N. PRESS, EDUCATIONAL PRINTERS, MADRAS—1934.